# கேனோபநிடதப் பேருரைகள்

சுவாமி சின்மயானந்தா



சின்மயா மிஷன்

4, கதீட்ரல் கார்டன்ஸ்

சென்னை-6

# உள்ளுரை



## கேனோபநிடதம்

ஓம்

குருப்யோ நம:

# அணிந்துரை

சகோதர சாதகர்களே,

எம்பிரானின் பணியாக ஸ்ரீசுவாமி சின்மயானந்த சுவாமிகள் பூனுவில் 1951-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஞானப்(பிரசார) யக்ஞத்தை ஆரம்பித்தார்கள் இந்த யக்ஞம் பழைய சம்பிரதாய முறையில் அமைந்த ஒன்ருய் இராமல் ஆய்தல், தெளிதல் என்ற முறையில் திட்டமிட்டு நடத்தப்பட்ட ஒன்ருகும். ஒருவர் பேசப் பலர் கேட்கும் யக்ஞம் அல்ல அது. ஆனுல் உபநிஷதங் களுள் ஒவ்வொருவரும் தாமே முழுகி ஒளிந்து இருக்கும் முத்துக்களை வெளியேற்ற உதவியாக ஒவ்வொருவரும் சமமான பங்கு கொள்ளத்தக்க அரங்க மேடையாக அது அமைந்தது.

பிரும்மத்தைத் தேடிச் செல்லும் யாத்திரை அது. அந்த யாத்திரையில் சுவாமிகள் கப்பல் செலுத்தத் திசை காட்டும் கருவியாக உதவினுர்கள். வேதாந்தப் பேரலைகளை ஆளக்கூடிய நன்கு அறிந்த மீகாமனுக முன் பின் அறியாத நடுக் கடற்பாதையில் நம்மைக் காத்தார்கள். இப்பொழுது நாம் ஒரு வழியைமட்டும் போட்டுக் கொள்கிறதிலேயே ஈடுபட்டிருந்தபோதிலும்

கூட நம்முள் ஒவ்வொருவரும் தன் அறிவு ஆற்றலுக் கேற்றவாறு ஒரு தனிவழி செல்ல இயலும்.

நாம் இதை ஆராய்ச்சி யக்ஞம் என்று சொல்லு கிறோம். ஏனென்றால், உபநிஷதப் படிப்பு தப்பான மதிப்பீடுகளை மறத்தலும் வாழ்வின் உண்மையான மதிப் பீடுகளைத் தேடிக் காணலுமாம்; மேலும், அன்று ரிஷிகளை இந்தப் புறப்பொருள் உலகின் அடிப்படை உண்மையை யும் இவற்றிற்குப் புறத்தேயும் பின்னாலும் இருக்கும் தத்துவத்தையும் விசாரித்தறிய எந்த ஓர் ஊக்கம் தூண்டிற்றோ அந்த ஊக்க உணர்வை விசாரித் தறிவதுமாம்.

ஸ்ரீ சுவாமிஜி அவர்கள் அடிக்கடி வற்புறுத்தி வந்த படி அடிப்படையில் ஒன்று கூடிப் படித்து விவாதிப்பது தான் அழுத்தம் பெறக்கூடியதாகும். மஹானான ஸ்ரீ சுவாமிஜி வழிகாட்ட நாம் அவ்விதம் கூடி விவாதித் தால் அது உபநிஷத மந்திரங்களைப்பற்றிய நம் அறிவை தெளிவுபடுத்தி ஒற்றுமைப்படுத்தவும், நம்முடைய அறிவை மேலும் கட்டி அமைக்கவும் உதவும் என்று நாம் நம்புகிறோம்.

பூனாவில் நடந்த நூறு நாள் ஞான யக்ஞம் நம் ஒவ் வொருவருக்கும் அழைப்பு; அறைகூவலுமாகும். மகோன்னத முயற்சியொன்றில் பங்கெடுத்துக்கொள்ள நமக்குக் கிடைத்த அழைப்பு அந்த யக்ஞம். நாம் மீண்டும் கல்வி பெறவும் வாழ்வின் உண்மைப் பெருமை களில் ஈடுபடவும் நமக்கு ஒரு வாய்ப்பை அளித்தது.

யக்ஞம் உபநிஷதங்களுக்கு முன்னுரையாகவும் அவற்றைப்பற்றிய விவாதமுமாகும். தானே தனக்காக ஒவ்வொருவரும் அவைகளின் செய்தியை விசாரித்து அறிவதாகும். அது சமர்ப்பண மனோபாவத்தில் திட்ட

மிட்டு நடத்தப்பட்ட ஒன்று. இந்த உயர்ந்த சிறந்த முயற்சி வெற்றியுடன் நன்முடிவுபெற ஒவ்வொருவரும் பங்கெடுத்துக்கொண்டு ஒத்துழைக்கவேண்டியது இன்றியமையாதது.

ஆகவே எல்லோரையும் நாம், "இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும், உண்மையைத் தேடுகின்றவர்களுடைய திருத்தொண்டர் கூட்டத்தில் சேர்ந்து கொள்ளவேண்டும்," என்று அழைக்கிறோம்.

விழிமின்; எழுமின் — இலட்சியத்தை அடையும் வரை நிற்காதீர்கள்.

தில்லி
1—4—56

பக்தகோடிகள்



# 1. நான் முகம்

இன்று நாம் நேர்மை நெறி பண்பாடு இவற்றின் தரத்தில் மிகவும இழிநதிருக்கிருேம. அத்துடன் நாம் சமயத்தையும் அடியுடன் மறந்துவிட்டோம் எனருல் அழிவை நோக்கி நாம் போகும் வேகம மிகவும் விரைவு பெறறுவிடும். நம் மதங் தளர்ந்திருக்கிறது என்று கொண்டாலும்கூட "மதச்சார்பற்று" இருப்பதைவிட அந்த மதத்தைக கொண்டிருப்பது எவ்வளவோ நல்லதாகும். புத்திசாலித்தனமான செயல் முயன்று அம்மதத்தில் ஒரு மறுமலர்ச்சியைக் கொண்டுவருவதுதான். சரித்திரப பழங் காலத்தில் நாம பெருமை கொணடிருநதோம். பண்பாடு, நாகரீ கங்களின உச்சியில நின்றிருநதோம. அநதப் பெருமையை, மறுமலர்ச்சி பெற்ற மதத்தின நிருபிககபபடட பெருமையில நாம் மீண்டும அடைய முடியும்.

இந்தியாவில் ஹிநது மதம் என்ருல் ஏதோ சில புனிதமான நம்பிககைகளின தொகுப்பு, உணணுதல், உடுததல் உரை யாடுதல முதலிய செய்கைகளில் நாம் கையாளவேண்டிய முறை களின குறிப்பிடட சடடம் என்ற அளவிலதான பொருள்பட ஆகிவிட்டிருககிறது. நம் ஈசுவர மூர்த்திகள் தெய்வத் தனமையி லிருந்து இழிநது பக்தாகள் விருமபும் பொருள்களுக்கு "பெர்மிட்" தரும கணட்ரோல அலுவலகங்களாக மாறிவிட்டனர்.

இந்த வீழ்ச்சி சரித்திரத்தில் திடீர என எதிர்பாராமல் ஏறபட்ட பலனல்ல. ஆயிரக கணக்கான ஆண்டுகளாக ஹிநது சமயம அரசர்களின் ஆதரவையோ செலவநதர்களின் ஊக்கத் தையோ பெற முடியாமல வேண்டாத குழந்தையாக இருந்து வருகிறது. ஒரு காலத்தில் வேதாந்திகள அரசாஙகததுக்கு அறிவுரை தரும் நல்ல நிலை இருநதது. கடந்த சில நூற்ருண்டு களாக அறிவுரை தரும் மககள் பகுதி ஆளும் பகுதி இரண்டுமே

நேர்மை இழந்துவிட்டன. அதன் பயனுய் இன்று இந்த நிலைக்கு வந்து சேர்நதுவிட்டோம். படிததவாகள் உண்மையில் சீறுவது பொதுப்பட இநத "மதமற்ற" நிலையை எதிாத்துததான்.

ஹிந்து மதம் முழு வளர்ச்சிக்கான சாஸ்திரம். அதில் ஒரு உயிர்ச் சக்தி உண்டு. அதை நாம் எல்லோரும் பெற்றுப் பகிர்நது கொள்ளலாம். தனி மனிதன், சமூகம், நாடு, உலகம் இவை களின் எந்த அளவிலும் எழும் எந்தப் பிரசினைக்கும் அதில் ஒரு பதில் கிடைக்கும். நமக்கு இன்று "இவைதான் ஹிந்து மதத்தின் முதுகெலும்பு போன்ற பகுதிகள்" என்று சொல்லிக் கொடுக்கப் பட்டிருக்கின்றனவே அந்த அநேக நம்பிக்கைகளை நம்முடைய புனித நூல்களில் காண முடிவதில்லை. ஹிநது மதம் வேதாந்த மதமாகும். உபநிஷதங்களின் 'நித்திய மதமாகும்.'

மனிதன் உண்மையில் அதாவது வளர்ச்சியின் எல்லை உச்சி முடிவில் கடவுளேதான் என்று உபநிஷதங்கள் ஐயந்திரிபற்ற செவிகளில் எடுத்துச் சொல்லுகின்றன. அவனுக்கு வாழக்கை யின் அன்ருட அனுபவங்களை ஒரு ஒழுங்கு முறையுடனும், விஞ்ஞானப் போக்கிலும் வாழும்படி போதிக்கப்படுகிறது. அப் பொழுதுதான் அவன்மேல் சொறிந்து கொட்டி அவன் உள்ளழ கையும், தெய்வத் தன்மையையும் மறைத்து நிறகும் குறைபாடு களின் உருட்சிகளைத் தெரிந்தும், முயன்றும் நீக்கிக்கொள்ள இயலுகிறது. ஒருவன் மனதறிய முயனறு எவ்விதம மலம் நீக்கி தன் உண்மைத் தன்மையை அடையலாம என்று காட்டித் தருவதுதான் ஹிநது மதம். ஹிந்து மதததின் கோவிலில் உண்மை ஒளி எரிகிறது. அதைத்தான் பெரியவாகள புராணங் கள், இதிகாசங்கள, சாஸ்திரஙகள் மறறும ஆயிரதொரு கற்பனைகள் வியாகியானஙகளின் அடர்ந்த மறைவையே பூசித்து வருகிருர்கள். மேலே அடாந்த இநத மறைவுகள் காடாய் வளர்ந்துவிட்டன. உண்மை ஒளி சிறிய ஒளி அதன் உண்மை அழகும், பெருமையும் நன்கு மறைககப்பட்டு விடட காரணத தால்தான், கல்லூரியில் படித்தும உண்மையறிவிலலாதவாகள் பழம்கால சமஸகிருத நடையும், மொழியும புரியாமல், கோவிலை

மறந்து அதன்மேல் மண்டிக்கிடக்கும் பூமாலை தோரணம் ஆல வட்டம் திரைச் சீலைகளைப் பார்க்கிறார்கள். உபநிஷத ஞான யக்ஞத்தின் கருத்து நம் மதத்தின் கிரந்தங்களிலேயே புகுந்து அவைகளின் கருத்துரைகளை நம் அன்றாடம் பிரசினைகளைத் தீர்க்க உதவும்படி கொண்டுவந்துதர முயலுவதுதான்.

மதம் அன்புடன் இடும் உத்தரவுகளை மதத்தின் பற்றுக் கொண்டவர்கள் ஏற்று நடக்கவில்லை என்றால் மதம் ஆற்றல் மலடாகிவிடுகிறது. மதம் என்ன அரசியல் சமூக அல்லது கலாசாரத் துறையில் எடுத்துக் கொண்டாலும் போற்றிப் பின்பற்றப்படாத எந்தக் கொள்கைதான் நமக்கு நன்மை பயக்க முடியும் ?

நம் பண்பாட்டைப் பற்றிய புத்தகங்களின் பழம் பேச்சு இறந்த பெருமைப் பேச்சு. அது இன்று நமக்கு உதவாது சுவைக்கு. வெளியார் காணாத ஆப்பிரிக்கக் காடுகளில் வாழும் காட்டுமிராண்டிக் குகை மனிதர்கள் நவீனகால மக்களைப்போல் பணபு அடையவேண்டும் என்று விரும்பினால் பேச்சுக்களாலோ அல்லது பண்பாடடைந்த மக்களின் பெருமை பேசும் இலக்கியத்தை வரிவிடாமல் படித்தோ அந்தப் புரட்சியைக் கண்டுவிட முடியாது. அவாகள் நாகரீக வாழ்வின் நன்மைகளை அறிநது கொள்ளல் வேண்டும். அவற்றின்படி வாழவும் வேண்டும். ஒனறைப் பறறிய அறிவின் பயன் செயல்படும் போதுதான் கிட்டமுடியும். நாகரீகமடைய விரும்பும் அவர்கள் தஙகள் அநாகரீகக் கருத்துக்களையும் செயல்களையும் அறவே விட்டுவிடல் வேண்டும். உண்மையில் “விட்டுவிடல்” இல்லாமல முன்னேற்றம் இல்லை. பிள்ளைப் பருவத்தில் விளையாட்டுக்கள் தரும் புகை இன்பத்தை விட்டுவிடத் தயாராகாத போனால் நாம் சிறந்த செயலபுரியும் காளைகளாக வளரமுடியாது. மீணடும் காளைப் பருவத்தின் வேகப் போக்கை ஒழிக்காத போனால மதிப்புப் பெற்ற முதுமையின் உயாந்த தளஙகளை அடைய முடியாது.

உலகாயத வாழக்கையின் கீழ்த்தரமான மிருக ஆசைகளை விட்டுவிட்டு அவற்றிற்குப பதிலாக உண்மையான சுயவாழ்க்

கையின் உயர்ந்த மதிப்பீடுகளை விரும்பி ஏற்கத் தயாரில்லை என்றால் நாம் மதத்தின் வரப்பிரசாதத்தைப பெறமுடியாது. சமையலைபபற்றிய புத்தகத்தை எவ்வளவு தெளிவாகப படித தாலும், படித்த அளவில் பசி தீரப்போவதில்லை. மருந்தின் பெயரைத் தியானம் செய்து ஜபம் செய்தாலும் வியாதி தீராது. அதை உள்ளுக்கு உண்டாலதான் வேண்டிய நன்மை கிட்டும். அதே போல மதம் நன்மை பயக்க அது காட்டித் தரும் உண் மைகளை வாழ்ந்து பாரத்தேயாக வேண்டும்.

வாழ்க்கை குறுகியதுதான். அதற்குள்ளேயே மனிதன் எல்லா மதங்களுக்கும் உண்மைப் பகுதியான அந்த நித்திய இன்பத்தையும் ஆனநதத்தையும் அடைந்துவிட முயல வேண்டும். உபநிஷதங்கள் கூறும் உண்மையின் ஒளியில் நாம் நம்முடைய சமுதாய வாழ்வில் மதம் ஏற்படுத்தித் தந்திருக்கிற நிறுவனங்களின் உண்மைக் கருத்தை அறிந்து கொளளமுடியும். இறுதியில் நாம் பூரண வளர்ச்சியின் சாஸ்திரத்தை அறிநது கொள்ளுவோம். அதுதான் ஹிந்துமதத்தின உண்மைப் பொருளாம்.

எனவே நாம் ஹிந்து மதததின் உண்மைத் தன்மையை அறிந்து கொள்ள முயலுவோம். நமக்காக மட்டுமல்லாது உலகம் பூராவுக்குமாக ஒரு முடிவு செய்து கொள்வோம; நமமுடைய பழம் பெரும் மதம் எடுத்துக கூறும உணமையை நமபினால் அதன்படி இயன்றவரை நடபபோமாக. நாம் ஹிந்துக்களாக உண்மையிலேயே ஆகி நம் நாடான இநதியாவை நாம் எவ்வளவு பேர் இருக்கிறோமோ அவவளவு புததர்கள், சங்கரர்கள் விவேகானந்தர்கள் கொண்ட நாடாககுவோம்.



# மதம் என்பது என்ன?

மதம் மனிதனுக்குப் பெருமை தரும் ஒன்று. அது மிருகங்களின் இயற்கை உணர்வு அல்ல. மிருகம் உண்கிறது, உறங்குகிறது, இன்பம் துய்க்கிறது. அத்துடன் அதன் வாழ்க்கையின் வளவு சரி. மனிதன் இதையெல்லாம் பெற்றுவிட்ட பிறகும் திருப்தி அடைவதில்லை. வாழ்க்கையின் சிறந்த ஒரு நோக்கத்தை நிறைவேற்ற மட்டுமே ஆசை கொள்ளுகிறான். அவனுக்கு அத்தியாவசியமான இந்தத் தேவைகள் கிடைக்காதவரை அவன் முழுவதும் ஈடுபட்டு அவற்றைப் பெற உழைக்கிறான். இவை கிடைத்த உடனே அவன் தன்னுள்ளே எழும் உள் விசாரணைக் குரலைக் கேட்கத் தயாராகிவிடுகிறான்.

இந்த விசாரணைப் பழக்கம் ஆத்ம ஆசை நன்கு வளர்ந்த மனிதனுக்குத்தான் ஏற்படுகிறது. அதாவது மனிதர்களுள்ளும் இரண்டு கால்கள் கொண்ட பிராணிகள் இருந்துவிடலாம். புலிகள், ஓநாய்கள், மான்கள், பாம்புகள், தேள் எல்லாம் இருக்கலாம். அப்படிப்பட்ட மனிதர்கள் வளர்ச்சிப் படியில் அடித்தளங்களில் உள்ளவர்கள். அவர்கள் உள்ளே ஏற்படும் ஆன்ம ஆராய்ச்சி விசாரணைகளின் சந்தேகங்களையும், சங்கடங்களையும் கேட்கக் காது இல்லாதவர்கள், சந்தேக வியாதி இல்லை. அவர்களுக்கு மருந்தும் வேண்டியதில்லை.

ஆனால் முழு வளர்ச்சியடைந்த மனிதனை ஆன்ம விசாரணையின் ஆர்வம் முடுக்கி அவன் உணர்ச்சிகள், அறிவு இவற்றின் எல்லைவரை போகுமபடி துரத்துகின்ற ஆத்மாவின் அந்த அமைதியற்ற ஆட்டத்தில் அவன் உள் தத்துவமான என்ற புதிரைக் கண்டு அதன் சிரிலும் புதுமையிலும் ஆழ்கிறான். 'நான் எங்கிருந்து வந்தேன்? எங்கே போகிறேன்? ஏன் வந்தேன்? அர்த்தமற்ற வெற்றுச் சம்பவமா உயிர்பெற்று வந்தது? அர்த்தமுண்டா, நோக்கமுண்டா?' என்றெல்லாம் கேட்டுக் கொள்கிறான்.

மனிதன் முற்றிலும் வளர்ச்சியடைந்திருக்கவேண்டும்; அவன் அனுபவங்களை விழிப்புடன் ஏற்று வாழ்ந்திருக்கவேண்டும்; வாழ்க்கைச் சம்பவங்களைத் துருவி ஆயும் கண்கள் கொண்டு விழிப்புடன் நோக்கியிருக்கவேண்டும். அவன்தான் உள்ள வளர்ச்சியைப்பெறறு "ஆத்மாவின் பதற்றத்தை" உணர முடியும். மதம் அந்த மனிதனுக்குத்தான பேசுகிறது. அவனைத் தான் விளக்கம் தந்து நம்பிக்கை காட்டி அழைத்துச் செல்கிறது. அவன்தான உண்டு, உறங்கி, குடித்துச் சிரித்து அழுவதைவிட மிகச் சிறநத தெய்வீக நோக்கம் கொண்டது, அன்றுட வாழ்க்கை என்று அறிநதுகொள்கிருன.

ஒவ்வொரு உண்மை மதத்துக்கும் இரண்டு அங்கங்கள் உண்டு. ஒன்று செய்யவேண்டிய கிரியைகளைப்பற்றிய விதிகள்; மற்றொன்று வேதாநத சுட்டுக்கள். நம்மில் பலர் முன்னதையே மதம் என்று ஏறகிறோம். வேதாந்தமற்ற (கிரியைகள் வெளிச் சட்டங்கள் மட்டுமே கொண்ட) மதம் திருட்டு நம்பிக்கையாகி விடும். அப்படியே மதத்தின் அந்தப் பகுதியில்லாத வெறறு வேதாந்தம் பைத்தியக்காரத்தனமாகும். வேதாந்தம் கிரியை களுக்கு நோககம் கறபிக்கிறது. ஆற்றல் தந்து லட்சியத்தையும் ஏற்படுத்துகிறது. இரண்டும் சேர்நதே மதத்தின் முழு அர்த்தத் தையும் வெளிப்படுத்துகின்றன.

மதம் உண்மையில் வாழ்க்கையின் இலட்சியம். அதன் தன்மையைப்பற்றியே தெளிவாக விசாரணை செயவதையே தன உள் கிடையாகக் கொண்டிருக்கிறது. அது ஆன்மீகப் பயிற்சி களின் பரநத வழிமுறைகளின் விவரணமுமாம். அவற்றை எந்த நிலையிலுள்ள மனிதரும் தாம் வளர்சசி ஏணியில் இருக்கும் படியிலிருந்தே ஆரம்பிக்கலாம்; காட்டப்பட்டிருக்கும் இலட்சி யத்தை நோக்கி அங்கிருந்தே யாத்திரை தொடங்கலாம்.

மற்ற எந்த மதத்தைக் காட்டிலும் வேதாநதம் சத்தியப் பொருளைப்பற்றி விரிவாகவும, தெளிவாகவும் பேசுகிறது. ஞானிகளுடைய நேரடியான நெருங்கிய அனுபவங்களை அடிப் படையாகக்கொண்டு வேதாந்தம் பேசும் பேச்சுக்கள் பரம்

பொருள் மனிதன் உள்ளே இருக்கிறது என்ற முடிவுக்கு நம்மை அழைத்துச செல்லுகின்றன. மனிதன் தன்னை அறியும்வகை யில் ஏற்பட்டுள்ள சில தப்பான அபிப்பிராயங்களை நீக்கிக் கொண்டுவிட்டானுனல் தானே எங்கும் ஊடுருவி நிற்கும் சத்தி யப்பொருள் என்று நன்ருய் அறிந்துகொள்வான். மனிதன் கட்டுக்குளளும் எல்லைகளின் பிடிக்குள்ளும் சிக்கி உழல்கி ருன். அதனுல் அங்கலாய்க்கிருன். எல்லா உண்மை மதங் களுமே அவனுக்கு மிகவும் தேவையான மன நிம்மதியையும் ஆறுதலையுமே தருகின்றன.

ஒரு உவமை சொல்லலாமா? ஒரு மனிதன் கொஞ்சம் தன் மூளையை இழந்துவிட்டான். மாடியில வநத அவன் பால்கனிக்கு வந்து சேர்ந்துவிட்டான். மேலே மேகங்கள் திரண்டுவருகின் றன. மழைக் கால இரவில் இரத்தத்தை உரையவைக்கும குளிர் கௌவிக்கொண்டு வருகிறது. அவன் கலங்குகிருன். அழு கிருன். உழல்கிருன். பயமும், வருத்தமும் அவனைக் கவ்வி அலற வைக்கின்றன. அதே சமயம் அவனுக்குப் பின்னுல் உள்ளே செல்லும் வாயில் பாதி திறந்து நிற்கிறது. உள்ளே நல்ல படுக்கை, நல்ல சாப்பாடு எல்லாவற்றையும் தயாராக வைத்துக் கொண்டு அவன் காதலி நிற்கிருள். அவன் திரும்பினுல் போதும். தன் சொந்தமான வசதி நிறைந்த வீட்டையும் அதன் இனிமையையும், இன்பத்தையும் அறிந்துகொள்ளலாம். இஷ் டப்பட்டவுடன் தடங்கல் இன்றி நடந்து உள்ளே சென்று ஆனந்தமாய் அனுபவிக்கலாம். அப்படித்தான் நாமும் வாழ்க்கை யின் பால்கனியில் நிற்கிருேம். நம் அருமை மதம் உள்ளே அழைக் கிறது, 'மாடியின் வெளிப்பககத்தை விட்டுவா. ஒளி நிறைந்த உள் ஹாலுக்கு வா. உனக்கு எல்லா இன்பங்களும் கொடுத்து உன்னைப் பார்த்துக்கொள்வேன்' என்று. ஆனுல் மூளை புரண்ட வீட்டுக்காரன் மதத்தின் அழைப்பைக் கேட்கிருன் இல்லை. சம்சாரியாக அல்லலுறுகிருன்.

தொல்லை நீங்கும் வழி சுலபமே. உள்பக்கம் கண்ணைச் செலுத்தினுல் போதும். நாம் வெளிப் பொருள்கள் பக்கமே திரும்பி அமைதியையும் ஆனந்தத்தையும் தேடுகிருேம்.

குறைந்து அழியும் குணம்கொண்ட பொருள்கள் நாம் வேண்டும் அழியாத நித்திய ஆனந்தத்தைத் தரமுடியாது. அது இயறகை யாகவே ஆகாத ஒன்று அஙகே அல்ல; அது இங்கே, உளளே பெறப்படவேண்டிய பொருள். "தலையை நேர் மறுபக்கம் திருப்பு. உள்ளே பார். நீ தேடும் பொருள் அதோ உன் எதிரே." பெரும் மதங்கள் எல்லாம் இநத உண்மையைத்தான எடுத்துச் சொல்லுகின்றன. ஞானிகளும் யோகிகளும் உண்மை, உண்மை, உண்மை என்று ஒப்பம் கொடுக்கிறாகள்.

பொறிகள் அறியும் புறப்பொருள்கள் உண்மையில் இன்ப அமிசம் கொண்டவையல்ல. சுவை தருவதுபோனறிருக்கும சிறிய இனபமும் சீககிரமே புளித்துவிடும; கசநதுவிடும். புறப் பொருள அனுபவங்களே வருத்தம கொணடவைதாம். மதம் அவறறின் தனமையையோ நிகழச்சியின முறையையோ மாற்ற முயலுவதிலலை. உலகம் நிததிய விதிககுக கட்டுபபட்டு இயஙகிக் கொண்டுதான் இருக்கும். மதம தனனை நம்பும் மனிதனுக்கு வாழ்க்கையை அதிக விறுவிறுபபுடன் சநதிக்க உதவியளிக்கிறது. அவனுக்கு ஒரு மனத்தின் சம நிலையையும ஆனமீக அசஙகாத தன்மையையும அளிக்கிறது.

புறப்பொருள்கள் மாறாத நிலையிலும் அவை தரும் உணர்ச்சி யனுபவங்கள ஆளுககு ஆள மாறுகின்றன. ஒரு உதாரணம எடுத்துககொளளலாம். ஒருவா தன் மனைவியுடனும, இரண்டு பையனகளுடனும ஒரு வீட்டில் வசிககிறார். அவாகள ஒரேவித உணவை உணகிறார்கள. ஒரே ரேடியோ அவர்களுக்குக் கானம தருகிறது. ஒரே விசிறி அவாகளுககுக் காற்று தருகிறது. ஒரு ஞாயிறு மாலை அவர்கள் எல்லோரும இந்தவிதம அமர்ந்திருக்கும் போது அவர்கள் உணர்ச்சிகள் எல்லாம் ஒரே விதமாக இருக்குமா? இருக்காது என்றால் என்ன காரணம்? 'எல் லோரும் ஒரே விதமான அனுபவம் பெற இயலுமா?' எனறு கேட்கப்போனால அனுபவம எனபதே எனன எனற கேள்வி எழும. ஒரு புறபபொருள (அல்லது புறபபொருள்கள்) மனிதன் மனதிலும், புத்தியிலும் குறிப்பிட்ட இட நேரத்தில் பட்டு

எழுப்பும் எதிரொலியே அனுபவம் அல்லவா! அதே பொருள் மாறும் காலங்களில அதே மனிதனுக்கு மாறுபட்ட அனுபவத்தைக் கொடுக்கலாம். அனுபவங்கள் எத்தனமைத்தாயினும் மனது எதிரொலி எழுப்பவேண்டும் என்பது பொதுவான உண்மை.

உலகம் நாம் கட்டுப்படுத்த முடியாத ஒரு சட்டத்தின் கீழ் வளர்ந்து வருகிறது. புறப் பொருள்கள் நம் மனதில பட்டே எதிரொலி எழும்பவேண்டும். அதுதான் நம் அனுபவ உணாச்சிக்கு வித்து. ஆகவே நாம் நம் மனதை எல்லாப பொருள்களுக்கும், எல்லாக் காலங்களுக்கும் ஒரே மாதிரி உடன் பாடான எதிரொலியே எழுப்பத் தயார் செய்து விட்டோம் என்ருல் பிறகு மனதில் ஏற்படும் எதிரொலிகள் எப்பொழுதும் உடன்பாடானவையாகவே இருக்கும. அப்படி மனதைப் பயிற்சி செயவித்துக கொண்டவனுக்குத்தான் இந்த உலகில் ஆனந்தமும, அமைதியும் கைவரும். வெளியுலகம குறைபாடுகளும, துனபங்களும் கொண்டிருக்கும்போதும்கூட, அவ்விதம் பயிற்சி கொண்டிருந்தோமாஞல் நாம தனித்திருந்து நமமைச் சுற்றிச் சீறி அடிக்கும் புயலேயும, சுழலேயும் பாதிக்கப்படாமலேயே நின்று கவனிக்கும் ஆற்றல்பெற்று விடுவோம். மாட்சிபெற்று உள் சுதநதிர உணர்வுடன் கண்ணிரையும் கேவல்களேயும் கூட படாமலே நின்று சாட்சியாக நோக்குவோம். ஆம்; இது, நாம் உண்மையில் மதத்தைப் பின்பற்றி அது காட்டும் பயிற்சிகளேச் செயது எபபொழுதும் அசங்காத ஒரு மனச் சமநிலேயை அடைந்தால்தான் சாத்தியமாகும்.

மனத்தின் உண்மைவேலே. அதன வரப்பிரசாதங்களின் ரகசியத் திட்டம இவைகளே அறிந்துகொண்ட பிறகு நாம் அதை நன்மை கிடைக்கும என்ற நமபிககையுடனேயே அணுகலாம். துன்பத்தை இன்பமாகவும், தோலவிகளே வெற்றிகளாகவும், நஷடஙகளே லாபங்களாகவும் மாற்றித் தரும் மந்திரக் கல்லேப் பெறும்பொழுது, அதைவிட வேறு என்ன வெகுமதியை நாம் எதிர்பார்க்கப போகிறேம்? உணமையாக மதத்தை மதிக்கும் இதயம் படைத்தவன் வெற்றிக்கு வெறியாட்டம் ஆடவும்,

தோல்விக்குத் தற்கொலை புரிந்துகொள்ள ஓடவும், கோபம் வந்தால் கொலை புரியவும், பொருமையில் பொங்கவும, ஏழ்மை யைக்கண்டு ஏங்கவும், சந்தோஷம் வந்தால் கூத்தாடவும் மறந்து விடுவான். எந்த நிலைமையிலும் அவன் அசங்கமாடடான். பதறறமடையமாட்டான். அவன இதயம அமைதி, சமாதானம, சுகத்தின் ஆழ்கடலாக இருக்கும்.

அப்படிப்பட்டவன் தெய்வமனிதன், அவன் சாது, மகாத்மா, திர்க்கதரிசி. மதம் அப்படிப்பட்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள், விவேகானந்தர்கள், சங்கரர்கள், புத்தர்கள், கிறிஸ்து, முகம்மது நபிகள் நிறைந்த உள்ளம் படைத்து வாக்களிக்கிறது.

எல்லா மதங்களும் காட்டும் வழி ஒன்றுதான். தப்பான 'தான்' எண்ணத்தை விடு. அது ஏற்படுத்தும் மாற்றங்களை அகற்று. அழுகைகளும், அவதிகளும் அந்த "நான்" பேயின் செயல்களே. அந்தக் கடவுளின் பாதத்தில் அன்புடன் சமாப பித்துவிடு. இடைவிடாத விசாரணையில் "அகத்தை" லயப படுத்து. மெய் பொய் விளங்கியவுடன் அகக் கனவு மடிகிறது. தன் தனமையில் உள்ள எதிரிடைகளை ஒழித்து தெய்வவாழ்வின் உடன்பாட்டுச் சக்தியால் அதை நிறைத்துப புரட்சி செய்வதன் மூலம் அகத்தைத் தெய்வீகமாக மாற்று. எழு, விழி. லட்சியத்தை அடையும்வரை தயங்காதே.

மதம் விஞ்ஞானங்களின் தலையான விஞ்ஞானம். அது நம் உண்மை நிலையின் தன்மைக்கு பரிபூரண சச்சிதானந்த நிலைக்கு அழைத்துச் செல்கிறது. அஞ்ஞானத்தால் ஏற்படும் பிடிப்பை நீக்கும் மதம்—வேதாநதம்.

மிகவும் முக்கியமான உபநிஷதங்களுள் ஒன்ருன கடோப நிஷத்தில் ஒரு சாதகன யமனின வாசலுக்கே போய் விடுகிற கதை சொல்லப்படுகிறது. அவன் யமனைக் கண்டு பரம ஞானத் தைப் பற்றிக் கேட்கிருன். அதுதான் உண்மையான வேதாந்த மாணவனுக்கேற்ற ஊக்கமாகும். சாவும், வாழ்வும மாறுபாடு தெரியாதபடி அவ்வளவு நெருங்கியவை. சாவையும் தேடிப்

போகும் முயற்சிதான் உண்மையான வாழ்வாகும். உண்மையும், உழைப்பும் கொண்ட சாதகனுக்குச் சாவு என்பதே கிடையாது.

அந்தக் கருத்தில்தான் நம் முனிவர்கள், மகாத்மாக்கள், அவதார புருஷர்கள், தேவ தூதர்கள் எல்லோரும் அமரர்கள் என்று நாம் கருதுகிறோம். சாஸ்திரஙகளும் எடுத்துப் பேசுகின்றன. ஸ்ரீராமகிருஷ்ணர், பகவான் ரமணர், எல்லோரும் அமரர்கள். ஏனெனில் அவர்கள் வாழ்க்கையின் அர்த்தத்தைத் தெரிந்து அதன்படி நடந்தாகள். அவர்கள் உடலழிந்தும் வாழ்கிறார்களே. அது எப்படிச் சாத்தியமாயிற்று ?

இதை விளக்குகிறேன். ஒரு முறை பூனாவில் உப்பு மலையில் வாழும் இளைத்த எறும்பு ஒன்று அகமதாபாத்தில் மீரட்டிலுள்ள சர்க்கரை ஆலையிலிருந்து வந்த ஒரு கொழுத்த எறும்பைச் சந்தித்தது. மீரட் எறும்பு அழைக்கப் பூனா எறும்பு சம்மதித்துச் சில நாட்களுக்குக் காணக்கூடிய ஆகாரத்தை எடுத்துக்கொண்டு மீரட்டுக்குச சென்றது. நாட்கள் சென்றும் அது இளைபபு நீங்கக காணோம். அழுது வடிநதுகொண்டிருந்தது. சுரத்தாகக் காணப்படவில்லை. அதைக்கண்டு வருந்திய மீரட் எறும்பு காரணம் வினவ பூனா எறும்பு 'எலலாம் சரிதான். உங்கள் ஊர், சாப்பாட்டின் ருசி எனக்குப் பிடிக்கவில்லை' என்றது. சர்க்கரை ருசி இல்லையா ? மீரட் எறும்பு நன்கு கவனித்துப் பார்க்க ஆரம்பித்தது. பூனா எறும்பு வாயில் உப்புத் துண்டுகள் ஒட்டியிருப்பதை அறிந்த அது மெதுவாக அவைகளைத் துப்பச் செய்தது. பிறகு ? பூனா எறும்பு சாக்கரையின் உண்மை ருசியை அறிநது வியநதது. இவ்வளவு ருசியுள்ள பொருளை அது சுவைத்ததேயில்லை !

நாமும் வாழ்வில் பூனா எறும்பாக வாழ்கிறோம். இதயத்தின் கரிப்புப் பொருளை உமிழ் ; தெய்வ வாழ்வின் சர்க்கரை தித்திக்கும். பயம், கட்டு மட்டுகள், ஏமாற்றங்கள், எல்லாவற்றையும் ஒழியுங்கள் ; ஆனந்தமான, எல்லையற்ற, நம்பிக்கை நிறைந்த வாழ்வை வாழலாம். வேதாந்தம் அதைத்தான் சொல்கிறது.

உபபுத் துண்டுகளை ஒதுக்குங்கள். சர்க்கரை மலையில் சாவாத இனிப்பைச் சுவைககலாம.

நம்முள்ளே தனித்தனி இரு பிரகிருதிகள் இருககினறனர். ஒன்று தெய்வம். மற்ருென்று மனிதன். மனிதன் கட்டுண் பான், அழிவான். தெயவம கட்டுமட்டற்றது. அமரப் பொருள். நாம் எதிர்மறைகளுடன அதாவது மனிதப் பிருகிருதியின் இயறகைகளுடன ஒட்டுகிருேம். பூஞ எருமபின் தொல்லையை அனுபவிக்கிருேம. அதிலிருந்து நாம் ஒதுஙகிஞல் தெய்வத் தன்மையை அடைவோம். வேதாந்தத்தின சித்தாநதம் இதுவே. உபநிஷத ஞான யகளுங்கள் மனிதன் அழிந்தால் தெய்வ மாகலாம் என்பதை உறுதிபபடுததும முயற்சிகளே. நம்முள்ளே ஓர் எதிரி இருககிருன். அவன்தான் நம பேதைமைக்கும் அல்லல் களுககும் காரணம் எனின எவவளவு சீக்கிரம நாம் அவனைக் கண்டு பிடித்து வெளியேற்றி அழிககிருேமே அவ்வளவு சீக்கிரம் நாம் நம் இலட்சியத்தை அடையலாம். அநதச சத்துரு யாா ?

சாஸ்திரங்களும், கிரநதஙகளும் கூவிச் சொல்கின்றன. அதுதான் நம அகங்காரம். கீழ்த்தளத்தில் உள்ள 'நான்' என்ற உணாவு. அதை அழி. அலலல் தொலையும. அதுதான் சம்சாரி. அதுதான தொலலை தருவது. அகஙகாரமதான் சத்துரு என்ருல் நாம் அவனைத் தேடிக காணுவோம். அவனை அறிவோம். அறிந் தால் பிறகு சண்டையிடுவதறகுத் திட்டம் வகுக்கலாம்.

ஒவ்வொருவரும் "இந்த நான் என்ற உணர்வு எது; அது எவைகளால் ஆனது?" என்று கேட்டுக்கொள்ளுங்கள். நன்கு சிநதித்தால் வாழ்வின் பல பொருளகளின் (சம்பவங்களின்) நினைவுகளின தொகுதி எனறு அறிவீர்கள். நான் இன்னூர் மகன் படித்தவன்; இப்படி வாழ்ந்தேன், நேசித்தேன், வெறுத்தேன்... ஆம்; கடந்த காலத்தில் நாம் பெற்ற அனுபவங்களின் நினைவு தான் நான். அந்த அகங்காரம் வருங்காலத்தைப் பற்றிக் கொண் டிருக்கும் ஆசைகளையும் சேர்த்துககொள்கிறது. ஆகவே அது இறந்த பழம் காலம் பிறவாத எதிர்காலம் இரண்டிலுமே காணப் படக்கூடிய ஒன்று. இன்று உள்ளதல்ல அது.

ஆகவே இந்த அகங்காரம் மாயை ; இடுப்பில்லாத ஒன்று. கனவு, நிழல் ஒன்றுமில்லாதது. ஒரு காற்றுருவம். சாவும சங்கடமும் நம மெய்ப்பொருளின் இந்த நிழலுக்குத்தான் உண்டு. நாம் அதனுடன் ஒன்றி அந்தக் கஷ்டங்களை ஏற்றுக்கொள்கிறோம். இந்த நிழலிலிருந்து தனித்து வா. உன் மெய்மையை அறி. உளளே உளள கொடுங்கோலனைத் தொலைப்போம். அது நம் உள்ளங்களில் இராம ராஜ்யத்தை ஏற்படுத்தும். இதுதான் வேதாந்தம் தரும் சீரிய போதனையாம். மதங்கள் எல்லாம் இந்தப் பிசாசை அழிக்கும் வழிகளைத்தான் சொல்லித் தருகின்றன. ஆன்மப் பயிற்சி ஒவ்வொனறும் அதை அழிக்கச் செய்யும் முயற்சியே. சாஸ்திரங்கள் எல்லாமே வெற்றுயிருப்பது உண்மையல்ல என்று அறிவிக்கவே பாடுபடுகின்றன.

நம் மனம் ஒரு ஏமாற்று வித்தையை மந்திர ஜாலத்தைச் செய்துவிட்டது. உண்மையின் மேல் பொய்யை ஏற்றி அதைப் பிரித்து அறியமாட்டாமல் உண்மையை மாறுபாடாகப் புரிந்து கொள்கிறது. கயிற்றுப் பாம்பு உதாரணம் நன்கறிந்த ஒன்று. இருட்டில் கயிறறைப் பாம்பு என மிதித்த ஒருவன் 'பாம்பு கடியி'ன் பொய்யான மனத்துயருக்கு உள்ளாகிறான். எவ்வளவு சொன்னாலும அந்த "ஏமாறி வருநதுபவன்" நிம்மதி பெறுவதில்லை. ஆனால் அந்த இடத்திற்குள சென்று வெளிசசத்தில் கயிறறைப் பாாத்துவிட்டாலோ அந்த நிமிஷமே பாம்புக் கடியின் பதறறம் பறநதோடிவிடுகிறது.

பாம்பு என்ற எண்ணம் அவள் உள்ளம் பிறப்பித்த ஒன்றே. கயிற்றின் அறிவொளி உதயமானதும் அந்த எண்ணம் அற்று விட்டது. "கயிறு என்று அறியாமை" ஒழிந்தவுடன் அறியாமை தந்திருந்த பாம்பும் அகன்று விட்டது. அதே போல் நாம் உண்மை தெரிந்து கொள்ளாதபடியால் அதன மேல் ஏறி விடுகிறது. அகங்காரம் பொய். ஆத்மாவின் அறிவு ஏற்பட்ட வுடன அகங்காரம் அழிந்து விடுகிறது. ஜீவனின துயாகளும் ஒழிநது விடுகின்றன. அகங்காரத்தைப் பிரித்து எடு. சாந்தியைப் பெறு. அதுதான நம் உண்மைத் தன்மையாம்,

பழங்கால அனுபவங்களின் நினைவுத் தொகுதியும் வருங் காலத்தில் நாம் அடைய விரும்பும் ஆசைகளின் கனவுமே அகங்காரமாகும். இவ்விரண்டையும் மறந்து நாம் நிகழ் காலத் தில் மட்டுமே நன்கு வாழத்தெரிந்து கொண்டு விட்டால் அகங் காரம் அழியும். ஆத்மா ஜீவன் என்கிற அகங்கார நிலையிலிருந்து ஒதுங்கி ஆத்மாவிலேயே இருந்து இன்புறும் நிலைதான் சமாதி நிலை. யோகங்கள் எல்லாம் தம்முடைய இறுதியின்ப இலட்சிய மாகக் கொண்டுள்ள நிலையதுவே. யோக முறைக்குப் பலவழிகளை சாதகர்களுக்குத் தக்கவாறு காட்டலாம். ஆனல் சேரிடம்—ஆன் மாவை அறிதல்தான். நம்முடைய இறுதி, இலட்சியம்.

யோகத்தின் ஓரிரு முறைகளை எடுத்துச் சோதித்து யோகி களின் அகங்காரத்தை ஒழிப்பதில் அவை எவ்வாறு வெற்றி பெறுகின்றன என்று பார்க்கலாம். "பலனைக் கருதாமல் செயல்புரி. உன் சாதனைகள் மிகச் சிறந்தவையாக இருக்கும்!'' என்று பகவத்கீதை கட்டளையிடுகிறது. அது எபபடி ஆகும என்று ஆழ்ந்து சிந்திக்காது மேல் எழுநதவாரியாகப் படிப பவர்கள் வியபபுறுகின்றனா.

நீ உதாரணததின மூலம் அது எபபடி சாத்தியமாகும் என்று விளககலாம். ஒரு கமிஷன வியாபாரி ஒரு பெரிய தொழி லதிபரிடம போகிருர். லட்சககணககான ருபாய்களுககுப் பொருள வாஙக அவர் பேரம் பேசப் போகிருர். அதில் ஏராள மான ருபாய்கள் கமிஷனுகக் கிடைகக ஏதுவுண்டு. பேரம் செயயும் நாளுககு முதல் நாள் அநத வியாபாரி தான அடைய விருககும் ஏராள லாபத்தைப்பறறி எண்ணுகிறா. எனனென்ன செயயலாம்! மிகவும் இனிமையான கறபனைகளில் அவர் தன் மனத்தின் ஆற்றலை இழநது மயக்க நிலையை அடைந்துவிடு கிருர். பயனின இன்ப நுகர்ச்சியில வலிவான கற்பனையில் மனதிழநத நிலையில் அவர் 'கார் தொழிலதிபரிடம் பேரம் பேசுவதில் வெற்றி பெருவிட்டால்!' என்ற எண்ணம் வேறு அவரை ஆட்டி உலுக்கிவிடுகிறது. அந்த நிலையில் அவர் அங்கே சென்ருல் சொல்ல வேண்டியதை சரியாகச் சொல்லாமல்

கடைசியில் தோல்வி அடைந்துவிடுகிருர். மற்ருெரு வியாபாரி இருக்கிருர். அவர் பயனைப்பற்றி எண்ணிக் கனவுகண்டு அதன் இன்பத்தைக் கற்பனை செயது அதில் மனம் அழிகிரு இல்லை. ஒரு அமைதியுடனும் மன நிம்மதியுடனும், சமநிலையுடனும் செல்லுகிருர். அவர் தோற்றம், துடிப்பான எடுத்த பேச்சு, எல்லாம் தொழிலதிபர் மனதைக் கவர்கின்றன. காரியம் அழகாக முடிந்துவிடுகிறது.

சந்தை அலுவல்களிலேயே 'பயனை' மறந்த செயல் நல்ல முடிவைத் தரும் எனருல் மனிதனுடைய சிறந்த உயர்ந்த சமூக. தேசீய அலுவல்களில் அது எவ்வளவோ உண்மையாக வேண் டும். ஏற்பட இருக்கும் முடிவைப்பற்றி எண்ணுதே. செயல்படு. நம் திறமைகளையும், ஆற்றல்களையும் பிறவாத வருங்காலத்தைப் பற்றிய வீண் கனவில் அழிக்காதே. நிகழும் தற்காலத்தில் செய லாற்று. ஆனுல் அது ஈசுவரனே நடத்துபவன் என்று உறுதி யாய் நம்பிருலொழிய முடியாது. அவர் நடத்தும் நாடகத்தில் நாம் நடிகர்களே. விருப்பங்கள், திட்டங்கள் அவருடையவை. நாம் ஊழியர்கள். "பயன்" அவருடையது. வேலை நம்முடையது, இந்த எணணம் வலுத்து நாம் அவாபால் நெருங்க நெருங்க நம் செயல்களும் அவர் விரும்பியவையாக ஆகும். அவா திட்டங் களை நாம் மிகவும் உறுதியுடன் நிறைவேற்றிவைப்போம்.

யாரும் சும்மா இருக்க இயலாது. செயல் புரிவதைப் பயனை எண்ணிச் செய்யவேண்டாம். செயலே மனிதன் வளர ஒரு வாய்ப்பு. அகங்காரம் ஒழிந்தால் பயன் சிறக்கும். அதிகரிக் கும். இந்தச் சாது உங்களுக்கெல்லாம் பிருமம வித்தையைச சொல்கிருர் என்ற பெருமையில் செய்யக்கூடாது எம்பெரு மான் தன் எல்லையற்ற கருணையில் தன் விருப்பத்தை நிறை வேற்ற உபகரணமாக அவர் (சாது) வளர்ச்சிக்காகவே உபயோ கிக்கிருர் என்று பணிவுடன், நம்பிச் செய்யவேண்டும். ஆன்ம வளர்சசிக்கு உங்களில் ஒவ்வொருவருக்கும், கேட்கும் இவ்வளவு பேரும் சொல்லும் உத்தரகாசியும் தேவையான ஒரு திட்டத்தின் அமிசங்களே.

இப்படி என்றும் அவருடைய விருப்பத்துக்கு உட்பட்டு அவர் கருவியாக இயங்க இயங்க தவருன அகங்காரம் மறந்து விடும். அகங்காரம் தன் வாழ்வை அழித்துவிட்டால் பிறகு எஞ்சுவது கோடியான தெய்வ அனுபவமதான். அவர் பாதத்தில் விழுந்து சரணுகதியடை. அகங்காரம் உணர்வு சமாப்பிக்கப்பட்டு விட்டால் மனிதக் குறைபாடுகள் முடிகின்றன. ஆத்மார்ப்பணம் செய்த பக்தன் தெய்வமாக ஆகிவிடுகிருன்.

யோகங்கள் எல்லாம் யோகியின் ஜீவ உணர்வை அழிக்கவே வழி கூறுகின்றன. அது அழிந்தவுடன் தெய்வ உணர்வு எழுகிறது உணர்ந்துகொள், மீண்டும் பார், நான் ஏழை, நான் அழியும மனிதன், நான் பணக்காரன், கெட்டிக்காரன், சம்சாரி என்றெல்லாம் கனவு காண்பதை நிறுத்து. அதற்கு வழி உள் ஒளியைக் காண்பதுதான். உடனே அதைக் காண ஆற்றலில்லா விட்டால சுலபமான "சரணுகதி" முறையைப் பின்பற்றுவோம். உயர்ந்து நின்ருல் நிழலும் பெரிதாயிருககிறது. பாதியாய வளைந்தால் நிழல் பாதியாகிவிடும். உட்கார்ந்தால் இன்னும் சிறியதாகும். அவா பாதத்தில் விழுநதுவிடு. நிழல எங்கே? நம்முள்ளே இருக்கும் ஆத்மாவுககுள் அடங்கிவிடு. பொய் அகங்காரத்தையும் உண்மை ஆத்மாவையும பிரி. மனதை நினைவு நம்பிககைகளிலிருநது அகற்று. உளளததிலிருநது விருபபங்களைத துடைதது அலம்பு. விருப்பமறற நிலை, முழு வளர்சசி நிலை. அகஙகாரமறற நிலை, தெய்வ நிலை. ஞானம், சரியான வாழக்கை முறை அவற்றின் மூலம் இந்தப் பரம லட்சியத்தை அடை.



# பரம்பொருளுக்கும் நமக்கும் உள்ள உறவு

முக்கியமான உபநிஷதங்களில் அநேகமாக நன்கு வளர்ச்சி யடைந்த சிஷ்யன் பூர்ணமான ஆசிரியரை அணுகும் காட்சி வருகிறது. உபநிஷதங்களின் சுருக்கமான கடமையும், கருத்தும் செறிந்தவையுமான மந்திரங்கள் சிஷ்யர்களுடைய உடல் மன ஆத்ம வளாசசியை விரிவாகவும், தெளிவாகவும் எடுத்துக்கூற மறப்பதில்லை. அவர்கள் எல்லோருமே உடல் மனம் ஆன்மா மூன்றிலுமே நன்கு வளர்சசி யடைந்தவர்கள். ஆரோக்யம் படைத்தவாகள். உடல்நல ஒளியும், பிரம்மசசாரித் தேசும் கொண் டவாகள். வாழ்க்கையின் சிறு அனுபவஙகளைக்கூட விழிபபாக இருநது அறிவதிலும் அவற்றைப் பற்றிச் சிநதித்து முடிவுகள் திரட்டுவதில உன்னிப்பும், திறமையும கொண்டவர்கள். இமயமலையில் ஒதுங்கி ஆசிரமம் கட்டி வாழும் ஆசிரியரை அந்தக் காலத்தில் தேடி அடைநத மாணவன் வாழ்க்கை பயனற்றது என்று உணர்ந்தவனுகயிருந்தான். படும் பாட்டுக்கும், எடுத்துக் கொள்ளும் சிரமத்துக்கும் தக்க பலன வாழ்க்கை வாணிபத்தில் கிடைப்பதில்லை என்று புரிநதுகொண்டிருந்தான்.

தகுதிவாய்ந்த அந்த மாணவன் சுறுசுறுப்பு, திறமை, துடிப்பு, முதலியவை பெற்று ஞான ஆசை கொண்ட அந்த மாணவன ஆசிரியரை அணுகிக்கேட்டான்; "ஆசிரியர் பிரானே! அழியாத இனபம்கொணட பரிபூரணமான வாழ்க்கை எனக்குக் கிடைக் குமா? உண்டும் உடுத்தும், வமிச விருத்தி செய்தும் முயற்சி களில் ஈடுபட்டும அழுதும் சாவதைவிட வேறு புனிதமான கொள்கை கிடையாதா வாழ்க்கைக்கு? பிறப்பு என்ற நிலையில் லாத இடத்திலிருந்து ரகசியமான சாவு என்ற இடத்துககுப் போய்ச் சேரும் யாத்திரைதானு வாழ்க்கை? கட்டுமட்டுக்கள் நீங்கிப்பரிபூரண சுதந்திரத்தையும்ஆனநதத்தையும அனுபவிக்கும் ஒரு உலகம் உண்டா?" அப்படி இதயத் துடிப்பைக் கொட்டிய

வர்களிடம் தான் உபநிஷத ஆசிரியர்கள் ஒருவரைப் பார்த்தாற் போல் "தத்துவம் அஸி" (அது நீயாக இருக்கிறாய்) என்று சொல்லித் தந்தனர். இந்த மஹா வாக்கியத்தில் 'அது என்பது நீ என்னைக் கேட்கும அது! சாதகனே, அது நீ உன்னுள்ளே தேடுவதுதான்' என்று பொருள்படுகிறது.

சாதாரண மனிதனுக்கு உடல்தான் அவன். உடலையே நான் என்று அவன் மிகவும் ஆழமாகவும், அழுத்தமாகவும் கொள்கிறான். உடலுக்கும் உடல் தரும் இன்பத்துக்குமே உழைக்கிறான். அவன் வேறொன்றையும் அறியமாட்டான். அப்படிக் கீழ் வாழ்வு வாழும் மனிதன் பரம்பொருளுடன் தனித்திருந்து அடிமை புரியும் உறவைத்தான் கொள்ளமுடியும்.

அடுத்த மேற்படியில் உள்ளவர்கள் உடலுக்கு அப்பால் உள்ள மனம் புத்தியை உணர்ந்தவர்கள். அவர்கள் தம்முள் உள்ள மனம்-புத்தி மயமான மனிதனை உணர்கிறார்கள். ஆகவே அவர்கள் தங்களை அழியும் புழுக்களாகக் கருதத் தயாரில்லை. சிறந்த புனிதமான, ஏன தெய்வ சக்திகொணட மனம்-புத்தியின் அழியாத ஆற்றல் பெற்றவர்கள் எனறு அறிந்துகொண்டிருக்கிறார்கள. அவாகள் விஞ்ஞானததையும், கவிதையையும், சீர்தூக்குகிறார்கள். சிநதனையாளாகளையும், புதிதாகக கண்டுபிடித்தவாகளையும் போற்றுகிறார்கள். மனிதன் இயற்கைமேல் போரிட்டுப பெற்ற வெற்றியை உணர்கிறாகள. இவறறையெல்லாம் பார்த்து மனிதன் பெற்ற ஆற்றலும, பெருமையும் கடவுளுடையதைவிட அதிகக் குறைவானதல்ல எனறு பெருமைப்படுகிறார்கள். இந்த வளர்ச்சியுள்ளவர்களுக்கும், பரம்பொருளுக்கும் உள்ள உறவு முழுமைக்கும் அதன பகுதிக்கும உள்ள உறவாம்.

இநத இரண்டு வகை மக்களை மனதில் எண்ணித்தான் ஸ்ரீ மத்வாசசாரியாரின் த்வைதமும், ஸ்ரீ ராமனுஜாசசாரியாரின் விசிஷ்டாத்வைத வாதமும் பேசுகின்றன. பரமனும், பக்தனும் தனியானவர்களே. பக்தன் பரமனிடம் அன்பு, மரியாதை இரண்டும் கொண்டு அர்ப்பணித்துக கொள்ளும் உறவைத்தான் ஏற்க முடியும் என்று முடிவு செய்கிறது முன்னது. மனிதனின் பரம லட்சியம் கடவுள பாதம் அடைந்து என்றுமே அஙகே அவன்

திருச் சேவையில் ஈடுபட்டிருப்பதுதான் என்று பேசுகிறது அது. பின்னது வேறு வழியாக விவாதித்துவிட்டு பக்தன் பரமனின் ஒரு அங்கம் என்று முடிவு காட்டுகிறது.

வேதாந்தம் மனிதனே கடவுள் என்று துணிகிறது. அது மனிதன் ஆத்மத்தளத்தில் பெறும் இறுதியானதும், உயிர் போன்றதுமான அனுபவங்களைப் பேசி ஐயம் திரிபுக்கு இடம் இல்லாமல் அந்த முடிவை வெளியிடுகிறது. த்வைத விசிஷ்டாத்வைத வாதிகள் இதைக் கேட்டுக் கண்டிப்பாக இது கற்பனை என்றுதான் சொல்வர். ஏன் எனில் த்வைத வாதி உண்மைப் பொருளை உடல் தளத்திலிருந்து நோக்குகிறான். விசிஷ்டாத்வைத வாதி மனம் புத்தித் தளத்திலிருந்து நோக்குகிறான்.

வேதாந்தம் பயிலவரும் மாணவன் நன்கு வளர்ந்தவன். அவன் உடல், மனமயமான மனிதனின் புனிதத் தன்மையுடன் திருப்தி யடையத் தயாரில்லை. மனம் புத்தியைவிட மிகவும் சூட்சுமமான ஒன்று தனக்குள் இருந்து ஒளிந்து விளையாடுவதை அவன் மங்கலாய் உணர்ந்திருக்கிறான். அதைப்பற்றிக் கேட்கிறான் அவன் தன் ஆசிரியனிடம். ஆசிரியனும் அவன் உணர்ந்ததை அழுத்தம் செய்கிறார். தக்க ஆதாரங்கள் காட்டி உயிரின் உயிருக்கே அழைத்துச் செல்கிறார். அதுதான் ஆத்மா—சாதகனே அதுதான். குருவின் சங்கேதச சொற்களின் முழு ஆழத்தையும் அறிந்த சிஷயன் அந்தப் பேருண்மைப் பொருள்தான் என்று அனுபவத்தில் உணரும்போது அவன் பரிபூரண ஞானம் கைவரப் பெற்றவனாக ஆகிறான். அந்த நிலையில் அவன் உடலையும், மனதையும் தான் என்று ஏன் நினைக்கிறான்? இனி வேறு வேறு என்ற "இரண்டு" எண்ணத்துக்கு இடம் ஏது? வேதாந்த மாணவன் உண்மையைத் தேடினான். அனுபவத்தில் உண்மையாகவே ஆகிவிட்டான். அப்படிப்பட்ட மாணவனுக்குப் பேசுவதுதான் சங்கரரின் அத்வைத சாஸ்திரம். பேருண்மையுடன் நாம் கொண்ட இந்த மூன்று வகை உறவைத்தான் இராமா காதையில் பெரும் ராம பக்தனான ஹனுமான் ராமச்சந்திரனுடன்தான் கொண்டுள்ள உறவைப் பற்றிப் பேசுவதன் மூலமாக எடுத்துக் காட்டுகிறார். ஹனுமான் சொல்லுகிறார்:

"எம்பிரானே! உடலுணர்வில் நான் மறந்திருக்கும்போது தான் உன் அடிமை. மனம் புத்தித் தளத்தில் நான் இருக்கும் போது அதாவது ஜீவனாக இருக்கும்போது உன் பகுதியாக விளங்குகிறேன். என் உண்மை ஸ்வரூபத்தில் நான் நீயே!"

அப்படியே நாம் பரமனுடன் கொள்ளும் உறவும் நம் உணர்வு நிலையைப் பொறுத்து இருக்கும். பெரிய ஞானிகூட குளிர் சூடு தரும் அல்லல்களால் உடல் தரும் துன்பங்களுக்கு வருந்தலாம். அப்பொழுது அவர் ஈசுவரன் காலில் விழுந்து அவன் அருளுக்கு வேண்டுவார். சில சமயம் அவரே மனம் தரும் பதற்றம், உணர்ச்சி செய்யும் கூற்றுக்கு இலக்காகி சிந்தனையின் சிறந்த பயன்களாகக் கவிதையோ மற்று வேறு ஆக்கமோ செய்யலாம். கடவுளுக்கே சமமான சிருஷ்டி ஆற்றலை அவர் அப்பொழுது பெறுகிறார். சமாதி நிலையிலோ! இந்த உறைகளிலிருந்து எல்லாம் நீங்கி உள்ளுக்கும் உள்ளே இருக்கும் ஆன்மாவில் லயமாகிவிடுகிறார். அப்பொழுது 'சிவோஹம், சிவோஹம். நான் அதுவே' என்று உணர்கிறார். ஜீவனும் பரமனும் சேர்ந்து ஒரே பொருளே!

இதில் ஒரு சிறப்பு. மூன்று வாதங்களும் ஒன்றுக்கொன்று எதிராக இல்லை. வளர்ச்சியின் உச்சியை அடைய இந்த மூன்று கட்டங்களையும் தாண்டியாக வேண்டும். "புத்தி சர்க்கஸ்" செய்யும் பண்டிதர்கள்தான் அதையோ, இதையோ உண்மையானது என்று நிலைநிறுத்த வாதம் இருக்கின்றனர். ஆத்ம சாதனைப் பாதையில் இறங்கி நடப்பவர்கள் இந்த மூன்றையும் வழிநடை கட்டப்பட்ற அமைக்கப்பட்டிருக்கும் அன்ன சத்திரங்கள் என்று உணர்வார்கள். முதலில் நீ மத்வர் தரிசனம் செய்து கொண்டு பிறகு ஸ்ரீ ராமானுஜர் பூஜையை முடித்துக் கொண்டுதான் வேதாந்த அரண்மனைக்கு வர வேண்டும். அங்கே நாமே சங்கரர் என்று உணரலாம்.

ஆகவே நாம் சண்டையை நிறுத்தி யாத்திரையைத் தொடங்குவோம். நாமே பரமபொருளுடன் நம் உறவை நேரில் அறிந்து கொள்வோம்.



# பாதை

**நா**ம் இன்று உபநிஷதங்களைப் படிக்க ஆரம்பிக்கிறோம். பொருள்கள் ரசாயனம் போன்று இந்தப் பிரும்ம வித்தையும் ஒருவகை விஞ்ஞானமே. மற்ற வித்தைகளுக்கும் இந்தப் பிரும்ம வித்தைக்கும் ஒரு மாறுபாடு உண்டு. பிரும்ம வித்தை வித்தைகளுக்கெல்லாம் வித்தை. பிரும்மவித்தையின் பொருள் மற்ற வித்தைகளின் (விஞ்ஞானங்களின்) பொருள்களை விளக்குகிறது.

ரசாயன வித்தையில் அடிப்படை "அணுவை" க் கண்டு பிடிக்கச சோதனைகள் நடக்கின்றன. இயற்கையில் அதிலிருந்து மற்ற அணுக்களை எல்லாம் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு அணுவைக் கண்டுபிடித்துவிட்டால அந்த வித்தைக்கு அதற்கு மேல் போக்கு இல்லை. அப்புறம் அதன் அலுவல் எல்லாம் பல சேர்க்கைகள் தரும் பயனை அறியவேண்டியதுதான். அந்த அடிபபடை அணுவை, அழியாத அணுவை மற்ற அணுக்களின் ஆதாரமான அணுவைக் கண்டுபிடித்ததும் ரசாயன வித்தையில் நாம் தேடவேண்டிய பொருள கிடைத்துவிட்டது.

பிரும்ம வித்தையில நாம் எல்லா உயிருக்கும் மூல ஸ்தானததை, தனிபபெரும் உண்மையைத் தேடுகிறோம். உலக மும் நம் அனுபவங்களும் எந்த உண்மையில் எழுந்து, வாழநது கணத்துக்குக் கணம் அழுநதுகின்றனவோ அந்த உணமையைக கணடுகொண்டால மட்டுமே நாம் திருபதி அடைவோம். அதுதான் ஆதார அடிப்படை. மாறும் தோறறஙகளுக்குப் பின்னுலுள்ள உணமைப் பொருள். ஏழையின ஏழ்மை, பணக்காரர்களின் பண உள்ளம, பெருமைகொண்டவாகளின ஆற்றல எல்லா வற்றையுமே தெளிவுறுததக்கூடிய அநத லட்சியத்தை அந்த ஒரே லடசியத்தை அறிய முயல்கிறோம். பொறிகள, உணாவுகள், உடலகள், மனம எல்லாவறறின் இயககத்தையுமே அதுதான

தெளிவுறல் செய்கிறது. நாம் ஆழ்ந்து ஆழ்ந்து உயிரின் அடித் தளத்துகதுப் போக விரும்புகிறோம். ஸ்தூலத்திலிருந்து சூட்சுமத் துக்கு, வெளியுலகத்திலிருந்து உள் உலகத்திறகு நாம் பிரயாணம் செய்கிறோம். பொருள் எவ்வளவுக்கெவ்வளவு சூட்சுமமா கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதைப்பறறி (செயல்களில்) பேசுவது கடினம். அந்தப் பேச்சைப் புரிநதுகொள்வதும் அப் படியே. அந்த நிலையில் அறியச் செய்யும் நம் முயற்சி பயனடைய நாம் தொடர்ந்து இயைந்த ஒரு முறையைக் கையாளவேண்டும்.

உபநிஷதங்களில் ஊர் பேர் தெரியாத ரிஷிகள் இயைபில்லாத உண்மைகளைச் சொல்லிவிடவில்லை. உபநிஷத முடிவுகள் ஏகாதிபத்திய உத்தரவுகள் அல்ல. ரிஷிகள் படிப்படியாக நம்மை அந்தப் பெரும் உண்மைக்கு அழைத்துச் செல்கிறார்கள. சாவி போட்டுக் கதவு திறப்பதிலிருந்து ஆரம்பித்து உண்மைக் கோயிலின் கருப்பக் கிரஹம்வரை உடன் வருகிறார்கள்.

விளக்கக் கடினமான ஒன்றைச் சொற்களால் விளக்குவது என்பது எளிதல்ல. மனம் புத்தி இரண்டால் மட்டும பிரும்ம வித்தியை அறிந்துகொண்டுவிடலாம் எனற எண்ணத்துடன் உபநிஷதங்களைப் படிக்கக்கூடாது. ஆறறலகளுக்கெலலாம் ஆற்றலான அந்த உண்மையின் கோயிலுக்குள போகுமபோது மனம் புத்தி என்ற செருப்புகளையும கழற்றி வைத்துவிடவேண்டி யிருக்கும். மிகவும் பணிவுடன் நுழையவேண்டியிருககும். கல்லூரி மாணவன் தற்பெருமையுடன் நம் மனம புத்தியின ஆற்றலில் கர்வம் கொண்டு வரக்கூடாது. அப்படி வந்தால் வேதாநதத்தின் உண்மைக் கருதது ஒளிந்துவிடும். கூர்மைபெற்ற மனம் புத்தியைக்கொண்டு உயாந்த ஒரு கொள்கைககு உழைககத் தயாராக வரவேண்டும்.

உண்மை பலாத்காரமாக நம்மீது திணிக்கப்படுகிறது. தர்க்க ரீதியில் வாதித்துப் புறவுலக நிலைமைகளை அலசி அதன் பயனாக படிபபடியாக வியாதி தரும் பொய்மைப் பொருள்களி லிருநது விலகி மெய்மைப்பொருளை அடைகிறோம. தெய்வத்தைத் தேடும் ஆன்ம வாழ்வு ஏதோ நொண்டி முடஙகள வேலை என்று

நினைக்கிறார்கள்; பேய்பிடித்த மனது அல்லது கோணல் புத்தி கொண்டவர்கள் அல்லது ஏமாற்றங்களால் மனமொடிநதவர்கள் இவர்கள் சொன்னதையும் மண்டபம் என்று கருதுகிறார்கள். அது சரியலல. மதம் தெரிந்தவாகள் பேசும் பேச்சல்ல அது. தகுதியற்றவர்கள், மத்தி மட்டங்கள், அசட்டுக் கோணங்கள் இவர்களுக்கு அல்ல மதம். சிறந்த மதச் சம நிலையுடையவர்களுக்குத்தான் மதம். ஆன்மீக, மன உடலளவுகளில் சரியான வளர்சசி உள்ளவர்தான் அதையறிந்து பயிலமுடியும். கோழைகள் இந்த வித்தையில முன்னேற முடியாது. நல்ல உடல் மனக் கலங்கள் தெளிவு சுறுசுறுப்புடன் கூட ஆத்மப் பசிகொண்டவர்கள்தான் வழி நடக்க முடியும். நன்கு வளர்ந்து வாழ்க்கையை நன்கு வாழ்ந்த உள்ளங்கள், ஆர்வம் கொண்ட உள்ளங்கள்தான் வைராக்கியத்தை அடைய முடியும். வேதம் பயில, மாணவன் தகுதியை ஆசிரியர் கவனிக்கவேண்டும் என்ற விதி தப்பர்த்தம் செய்யப்படுகினறது. வேதம் மேதாவிகளுக்குத்தான் என்பதில்லை. சாதாரணமான நானும், நீஙகளும் அதறகு உரியவர்களே. இன்று பேசும்பொருளில் வேத வியாசரே பிராமணரில்லை. செம்படவப் பெண பிராமணரிடம் பெற்ற பையன் அவர். தர்ம சாஸ்திரக் கருத்தில அவரைச் "சண்டாளன்" என்று சொல்லவேண்டும. அது சரியாகாது. பிறவியால் மனிதரைப் பிரிப்பது ஆபத்து. அவர் புரட்சி செய்து வேதஙகளைத் தொகுத்துத் தநததால் அல்லவா இன்று நாம் உபநிஷதங்களைப் பற்றிப் பேச முடிகிறது. உலகம் போகும் நிலையில் பழைய சிரவண முறையை நமபினுல் வேதம அழிநதேவிடும் எனறு அனறு கணட அவர் அவைகளைப் பிரிததுத் தொகுத்து வைத்தார், நான்கு வேதஙகளாக. காலத்தின தேவை அது. அவ்வப்பொழுது இப்படி ஆசிரியாகள தோன்றித் தேவையான மாற்றங்களைச் செய்து வருவது சரித்திரம் சொலலும் உண்மை. அவர்களிடம் அதற்குத் தகுந்த ஆறறல், நம்பிக்கை, தைரியம், தீர்க்கதரிசனி முதலியன இருந்தன.

அதேபோல ஸ்ரீ சங்கரர் காலத்தில் மடம் நிறுவத் தேவை ஏற்பட்டது, அவர்களுக்கு முன் மடம் என்று ஒன்று கிடையாது.

பரவும் புத்த மதத்தைத் தடுக்க ஹிந்து மதத்துக்கு மடம் தேவைப்பட்டது. அதனுல்தான ஸ்ரீ சஙகரர் மடம் நிறுவிஞர். அதில் ஒரு சநநியாசி வேதாநத ஆசிரியராக அமாநது தொடர்ச்சி யாக, வருகிறவர்களுக்கு வேதாந்தம் கற்றுக் கொடுத்து வந்தார். ஆசிரியரும் மாணவர்களும் வருஷத்தில் எட்டு மாதம் கிராமங் மளில் சுற்றி வேதத்தின் பாடத்தைக் கற்றுத் தந்து வந்தனர்.

அப்படித்தான் தேவைப்படும் காலத்தில், தகுந்த ஆசிரி யர்கள் ஏற்பட்டு மதத்தின் தேய்ந்த பகுதிகளை நீக்கினர். ராமாயணம் முதன் முதலில் ஹிந்தியில் மொழி பெயர்க்கப் பட்டபோது அப்பப்பா வட இநதியாவில் என்ன அமக்களப் பட்டது? இன்று? அந்த மொழி பெயர்ப்பில்லாவிட்டால் வட இந்தியர்கள் அந்த மஹா புராணத்தை மறநதே இருப்பர். இன்றும் 'உபநிஷதம் நடுச் சந்தியில் பேசப்படும் பொருளா?' என்று திடுக்கிடும் பார்வை குறுகியவர்கள் எவ்வளவுபேர் இருக் கின்றனர்? அவர்கள் உபநிஷதம் பேசத் தலையின் அளவை நிர்ணயித்துக்கொண்டு தேடியவண்ணம் இருகக வேண்டியது தான். நம்மிடையே நல்ல வேளையாகத் தீாக்க ரிஷிகள தோனறி னர். அவர்கள், "இன்னும் கால் நூற்ருண்டு விட்டுவிட்டால் ஹிந்து மதமே மறைந்துவிடும். அபபடி விடககூடாது" என்று காண அறிவும் ஆற்றலும் கொணடிருந்தனர். சினமயா அநதக் கூட்டத்தினரின் தொண்டரே! ஹிந்து மதததை மறுமலர்சசி கொள்ளச் செய்வதுதான் நம தொண்டு. படிததவர்களிடையே உபநிஷதம் காட்டும் லட்சியஙகளைப் பரப்புவதுதான் ஞான யக்ஞத்தின் நோக்கமாம்.

எந்த வித்தையையும் பயிலுவதற்கு முன அநத விததையின் சில அடிப்படை உண்மைகளை அறிநது கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அந்த (விஞ்ஞான) விததைகளை அறிநது கொள்ள முடியும். அதே போல உபநிஷதஙகளை விசாரிததறியச் சில அடிப்படை 'வேதாநத பரக்ரியை'களைத தெரிநது கொள்ள வேண்டும. உபநிஷத முடிவுகள எலலாம அந்த அடிபபடைச சிததாந்தங்களின் மேலதான் நிறுவபபட்டிருககின்றன, அதே

போல பிரும்ம வித்தையின் மாணவாகளும் சில ஆதாரத் தகுதிகள் பெற்றிருத்தல் அவசியம். அவைகளே ‘சாதனு சதுஷ்டயம்’ என்ற இலக்கணப் பெயரில் சொன்னுல் ஆச்சரியம் ஏற்படுமே தவிர உண்மையில் அவை ஒனறும் புதிது அல்ல. அந்த நான்கும் பின்வருமாறு :—

1. மெய்யைப் பொய்யிலிருந்தும், உண்மையை இன்மையிலிருந்தும், பொருளை நிழலிலிருந்தும் பிரித்தறியும் ஆற்றல் மிகவும் தேவையானது. அது நம்மிடம் இல்லை என்று சொல்ல முடியாது. சிந்தனையின உயர்நத தளததில் உபயோகப்படுதத அறிந்திராவிடினும் நாம் மிருகங்கள் புழுக்கள் அல்லவே. அன்றுட வாழ்க்கையில் இநதப் பிறித்தரியும் ஆற்றலே உபயோகிக்கத் தெரிந்தே யிருக்கிறேம்.

2. வைராக்யம் என்ற குணம் : பொய்யான துயா தரும் பொருளகளிலிருந்து மனதை அகறறி வைததிருக்கும் ஆற்றலாம். வைராககியம் என்ற சொல் யாரையும் அசசுறுத்த வேண்டியதில்லை. நம்மில் வைராக்கியம அறறவர் யார் இருக்கின்றனர்? புத்தி ஒரு பொருளை உணமையில்லை, நிழல போன்றதே என்று உறுதியாய் அறிநதுவிடடால் மனது அதைவிட்டு ஒதுங்கி விடுகிறது. உள்ளது எனற துணிவும கொள்ளுதல நலம என்ற ஆவலும்தான விருப்பப் பிடிபபுக்கு ஆதாரம். கனவில் அரச குமாரியை மணந்தவன் விழிததவுடன் அவளை மறநதுவிடுகிருன. பொருளின் பொய்மையை உணாநது அதன் விருப்பததை அகறறுவதே வைராகயம் எனபபடும். வைராகயம் உளளவன வேதாந்தம் படிக்கத் தகுதி கொணட மாணவன ! சுருதி மனிதனிடம உளள இந்தக குணததைப பயன்படுத்திககொண்டு உலகத்தின பொயத்தன்மையை உணர வைக்கினறது. அவன வைராககியம அதிகரிககிறது ; வலுப் பெறு

கிறது. உலகைவிட்டு நம்மை அகற்றும் எதிர் மறைச் செயலைமட்டும் உபநிஷதம் செய்துவிட்டு, நிறுத்தி விடுவதில்லை. இன்னம் பூரணமான பெரிய உலகத்தை அது கதவு திறந்து காட்டுகிறது.

நம்மிடம் இந்தப் பெரும் குணங்கள் ஏற்கனவே உண்டு. ஆனால் அவை பயன்பட இடம் இல்லை. உபநிஷதங்கள் இரும்புத் திரையை அகற்றுகின்றன. சாந்திச் சமவெளி உண்மையின் உன்னதப் பிரதேசம் வெளியாகிறது. அமைதியும், அழகும் கொண்ட அந்த உலகம் ஆளில்லாமல் இருந்துவிட்டது. பாலும் தேனும் பாய்ந்துவரும் அந்தப் பரந்த வெளி—ஆத்மீக இந்தியா மீண்டும் அதன் ஆத்மீக சாம்ராஜ்யத்தைப் பெறுதல் வேண்டும். நாம் அதைச் செய்யமுடியும். நாமே சீர்பெற வாழ்ந் தால் அந்தச் சேதியை மக்களிடம் பரப்பலாம். யக்ஞம் நாம் செய்யும் உண்மையான முயற்சியே. உபநிஷதங்கள் கூறும் அந்த நம்பிக்கை நலவுலகத்தை அறிய நாம் எடுக்கும் முயற்சியே.

இந்த யாகக் கல்லூரியை அடைய மற்றும் இரு பெரு தகுதிகள்: (3) சாதன சம்பத்து—அதாவது புத்தியின் சிறப்பு, இதயத்தின் சீர்மைக் குணங்கள். (4) சர்வ வல்லமையும் பூர்ணத்துவமும் கொண்ட அப்பொருளை அறியவேண்டும் என்ற அணையாத ஆசை.

நாம் அடைய முடியாத பொருள் இருக்க முடியாது. ஏதோ ஆன்மீக வாழவும் சமயப் பற்றும் வாழக்கையில ஏமாற்றம கண்டவர், துயருற்றவர், தோல்வி கண்டவர்—இவாகளுககே என்ற எண்ணம் வலுவடைந்து வருகிறது. இது உண்மையே அல்ல. வேதாந்தம் நல்ல உடல் நிலையும், மன வலிவும் புத்தித் திறமையும் பெற்ற உலகியல் மனிதருக்காகவும் உள்ள பொருளேதான்.

தகுதி கொண்ட ஒரு வேதாந்த மாணவன் உலகம் எங்கிருந்து வந்தது, எங்கே போகும் என்ற கேள்வியுடன் தன் விசாரணையை ஆரம்பிப்பான். வெளி உலகத்தைப் பற்றிப்

பேசிய பிறகு நாம் நம் உடலை அதாவது ஐம்புலன்களை இந்திரியங்களை அறிய முயலுவோம. படிப்படியாக சாதகன் வெளியுலகத்திலிருநது தன்னுல் இருககும் மையப் புள்ளிக்கு வந்து சேருவான். பிறவிக் குருடனுககு 'உருவம்' தெரியாது. குருடன் பீரங்கி புகைகிறது என்றுதான் எண்ணுவான். நாககும், மூக்கும், சுவைக்கவும், நுகரவும் தேவைப்படுகின்றன. இந்த ஐந்து இந்திரியங்கள் (புலன்கள்) இல்லாவிட்டால் நமக்கு உலகம் இல்லை உலகம் இருந்தும் இல்லாப் பொருளாக நமக்கு ஆகிவிடும். அதாவது புறவுலக அறிவு புலன்கள் மூலமே பெறப் பெறுகிறது.

பிறகு சாதகன் மனம் புத்தி எப்படி வேலை செய்கின்றன என்று விசாரிப்பான். ஆனந்தம் எஙகிருந்து பொங்கி வருகிறது என்று கண்டு பிடிக்க முயலுவான். அப்படியே ஸ்தூலத்திலிருந்து படிப்படியாக சூட்சுமததுக்குச் செல்வான். வேதாந்தத்தில் இந்த ஸ்தூலப் பட்டைகள் எல்லாம் 'கோசங்கள்' என்று சொல்லப்படுகின்றன. வாளின் உறைபோல அவை உள் பொருளைத் தொடாமல் சுற்றி நிற்கும் உறைகள்தான். நம் உடல் சரீர கோசம். அதைவிடச் சூட்சுமமானது பிராணமய கோசம். அடுத்து சூட்சுமமானது மனோமய கோசம். வேதாந்தம் பேசும் சூட்சுமம் வியாபகத்வத்தை அதாவது பரவும் ஆற்றலை அடிப்படையாகக் கொண்டது. மனதைவிடச் சூட்சுமமானது புத்தி உறை. அடுத்தது ஆனந்தமய கோசம். அங்கேதான் ஆனந்த அலைகள் எழும்பும் மூலஸ்தானம் இருக்கிறது.

வேதாந்தத்தில் சூட்சுமத்துக்கெல்லாம் சூட்சுமமான பொருளை அடைந்து அறிந்து கொள்வதுதான் முயற்சி. ஆன்ம சாட்சாத்காரமான அந்த நேரத்தில் மற்ற ஸ்தூலமான கோசங்கள் விழுந்துவிடுகின்றன. அப்பொழுது நம் உண்மைத் தத்துவம், அநதப் பேருண்மை எங்கும் ஊடுருவி நிற்கும் அறிவுத் தத்துவமாக உணரப்படுகிறது.

உயிரின் உயிர்த் தத்துவ சக்திகளை நாம் உணர்ந்து அறியும் பொழுது, உலகின உயிர்களுக்கெல்லாம் மூலச் சுனையில் நாம்

ஆழும்பொழுது உலகமே நம்முன் தங்கியிருப்பது தெரியவரும்; ஆன்ம சாக்ஷாத்காரம் கொள்ளும் அந்த நேரத்தில் வாழ்வின் அனுபவ மலை யுச்சியில் நாம் ஆற்றல்களுக்கெல்லாம் ஆற்றலை, மையத்துககும் மையத்தை, பிரபுக்களுக்கெல்லாம் பிரபுவை உணர்கிற அந்த நேரத்தில், துயரங்கள் ஏமாற்றங்கள் வெற்றிகள் தோல்விகள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு, பூர்ணத்துவததின் மௌன ஆனந்தத்தையும் தெய்வீகத்தின் அமரத்துவத்தையும் ௬ ரம்.

அந்தப் மெயப்பொருளை அறிய முயலுவோம். மெய்ப் பொருள் ஒன்று உண்டாயின் அதற்கும் எனக்கும் உள்ள உறவு யாது? நாம் சுற்றி எங்கும் பார்க்கும் பெயர்களும், உருவங்களும் கரநது பரந்து நிற்கும் அந்த மெய்ப் பொருளின் திட்டத்தில் எஙகே இடம் பெறுகின்றன? ஜீவன் என்கின்ற 'நான்' தத்துவம் எது? 'ஜகத்' எது, கடவுள் எது? ஈசுவரன், ஜீவன், ஜகத்து மூன்றையும் பற்றி முற்றிலும் அறிய இந்த மூன்றின் பரஸ்பர உறவைபபற்றி அறியவேண்டும். பரம மெயப் பொருளைத் தெரியவேண்டும். தனித்தனி 'நான், நான, நான்' என்று முனைநது பேசும் ஜீவன்களின் பரஸ்பர உறவு நன்கு விளங்க வேுண்டும.

ஜகத்தாகிற தோற்றம் தரும் உலகிலுள்ள ஜீவன்கள எல்லாவற்றுடையவும் அறிவுகளின் தொகுதியே ஈசுவரனுக அறியப்படுகிறது; அது இராமன், கிருஷ்ணன, சிவன, கிறிஸ்து முகம்மது எனறெல்லாம் நாம் பேசும் ஈசுவரன் அலல. அது ஒரு பூரணக கருத்தாகும். ஈசுவரத் தததுவமாகும். அவதாரங்கள் எலலாம் அந்தப பொருளின் தோற்றங்களே. "கடவுள் ஜகத்தின காரண சரீரம்."

ஸதூலத்திறகும் அந்த சூட்சுமப் பொருளுக்கும் உள்ள உறவை அறிநது கொளள வேணடும். அது சுலபமான வேலை யிலலை. ஏன் எனின சொற்கள் அதை முடிவாகப் பேசி விட முடியாது. ஆகவேதான் வேதாந்தம் உதாரணங்களையும் உருவக விவரணஙகளையும கையாண்டு சாதகனுக்கு விளகக

முயலுகிறது. இந்த எடுத்துக் காட்டுகளும் பொருளின் ஓரிரு அமிசங்களை மட்டும் எடுத்துப் பேசுமே தவிர எலலா அமிசங்களையும தெளிவாகக் காட்டிவிட முடியாது. உதாரணமாக வேதாந்தம் கடவுள் எனகிற உண்மைத்தத்துவம் 'ஆகாயம்' போலிருக்கிறது என்று பேசுகிறது. அதிலிருந்து நாம் தெளிந்து கொள்வது: உண்மை எங்கும் பரவி நிற்கிறது. மற்றப் பொருள்களுடன் ஒட்டாமல் இருக்கிறது. வெளி (ஆகாசம்) பொருளுடன் இணைவதில்லே. குற்றங்கள செய்யப்பட்ட போதிலும் வெளி ஒரே நிலேயில் சுத்தமாகவும் அமைதியாகவும் இருக்கிறது. அதில் யாகம் ஒன்று நடந்து விட்டதனுல் அதன் புனிததன்மை அதிகப்படப் போவதுமிலலே. குற்றம் நடந்து விட்டால் அது கறை கொள்ளப் போவதுமில்லே. இந்த அடிப்படையானதும் முக்கியமானதுமான சுத்தத் தன்மையை வலியுறுத்தவே பரம பொருள் ஆகாசம் போன்றது என்று காட்டப்படுகினறது. அதைவிட்டு, சொற்களேப் பிளநது பொன முட்டை யாகிற பொருளேத் தேட முயற்சி செய்து "அதில் சூரியன் சநதிரன் இருக்கின்றனர். மேகங்கள அலேகின்றன" என்று எல்லாம் கூறவேண்டியதில்லே.

அப்படியே ஜீவனுககும், பரமனுககும் உள்ள உறவு ஒரு உவமை மூலம் எடுத்துக் காட்டப்படுகிறது. இந்த உவமைகள், எடுத்துக்காட்டுக்கள், விளக்க உருவங்கள், எல்லாம் யோசிக்க யோசிக்க ஒரு இனிமையான கருத்து ரசம் தருகிறது. ஜகத, ஜீவன், பரமன மூன்றின் உறவும் ஒரு துணியின் உதாரணத்தின் மூலம் விளக்கப்படுகிறது. ஒரு துணியில், துணிக்கு உபயோகித்த, அதே நூலால் பூக்கள் பின்னப்பட்டிருக்கின்றன. அப்படி அதே நூலால் பூக்கள் பின்னபபடட ஒரு துணியை எடுத்துக் கொண்டு பார்த்தால் அதில் நூல் பின்னப்பட்டிருக்கிறது. நூலாலேயேதான் அதில ஒரு குடும்பம ட சாப்பிட உட்கார்ந்திருப்பது போல் பின்னபபட்டிருக்கிறது. அதைப் பார்த்து நாம் அந்தக் குடுமபத்தைப்பற்றி ஒரு மனேபாவம் கொள்ளுகிறேமே அதே போலத்தான் சமுத்திரங்கள், கண்டங்கள், மலேகள் முதலியன கொண்ட ஜகத்தும் இருக்கும்.

இப்பொழுது பிரித்துப் பாரககலாம். அந்த டீ சாப்பிடும் குடும்பம் நூலில்தான் உருவம் பெறுகிறது. நூல் பிரிக்கப்பட்டு விட்டால் ஒன்றும் இருக்காது. அதே போலத்தான் ஈசுவரன் உலகிற்கு நூலின் நிலையில் இருக்கிருர். "ஈசுவர சர்வ பூதாஞம்." "ஏ அர்ஜுனு! நான எல்லோருடைய இதயத்தி லும் இருககிறேன். (பூ) மாலேயின் நூல் போல நான் எல்லா உருவத்துக்குள்ளும் புகுந்தும் அவற்றைத் தாங்கி நிற்கிறேன்!" என்று கிருஷ்ணன் பகவத்கீதையில் அருளிச் செய்கிருன. டீ சாப்பிடும் குடும்பப் பின்னலுக்கு நூல் ஆதாரமாகும். அதே நிலேயில் ஈசுவரன் உலகின் தோற்றங்களுக்கு ஆதாரமாகும். ஈசுவரன் இல்லே என்ருல் உலகம் இல்லேயென முடியும். பெயர்கள், தோற்றங்கள், சுவைகள், நாற்றங்கள், சத்தங்கள் தொடு உணாச்சிகள் இவை எல்லாம் சேர்ந்த அறிவே வெளி உலகம். அந்த உலகம் ஈசுவரனின் உண்மையால் அமைத்துப் பின்னப்பட்டிருக்கிறது. ஜகத்தின் ஈசுவர தத்துவமே துணி யாகும். தெய்வ தத்துவத்தை எடுத்து விட்டால் பினனற் கோலம் ஒன்றுமில்லே யென்ருகிவிடும. நூலகள அகனருல் துணி அதே கதியையடைநதுவிடும. பினனற் கோலஙகள் இடத்தில் உலகின் தனித்தனி ஜீவன்களேக் கொள்ளலாம். நூலே ஈசுவரனுகக் கொளளலாம்.

இந்த எடுத்துக்காட்டை இன்னம் கொஞ்சம் ஆழ்நது ஆராயலாம். நூல் எதனுல் செய்யப்பட்டது? தானே பிறநது அழியாது இருக்கும் ஒனருு அது? தானே தன்னுள் நிறகும் ஒன்ருு அது? துணிக்குக் காரணமான அதறகுக் காரணம் பிறி தொன்றுண்டா? உண்டு என்ருல் அது எது?... பருத்தி! பருத்தியிலிருநது எழுந்த நூல், நூல் தநத துணி, அதில் நூலே பின்னிய பினனற் கோலம் எல்லாம் பருத்தி அழிந்தால அழிந்து விடும்.

மண்ணுல் பத்து உருவங்கள் செய்யலாம். அவற்றிறகுத் தனித்தனி உருவம தரலாம. தனித்தனிப பெயரிடலாம். உருவ மும், பெயரும் ஒன்றையொனறு ஒட்டி மாறலாம். ஆனுல

எல்லாவற்றையும் உடைத்தால் கிடைப்பது மண். அந்த உருவங் கள மண்ணில ஏற்பட்டு மண்ணில் நிலைத்து மணணில் ]ன்றன. ஆகவே அம மண உருவங்களுககெல்லாம் மெய்ப பொருள மண்.

அதே போலத் துணியில் உண்மை(பகுதி) பருத்தியே. இதை நாம் அறிவோம். அறிந்தும் மறக்கிறோம். கடையில் உளள சிறுவன் துணியைப் பருத்தி என்று அறிய மாட்டான். அதே போல் நாமும் உயிரே மெய்ப்பொருளாக இருந்தும் மெயப் பொருளை வேறு எஙகோ தேடி அலைகிறோம்.

மெய்ப் பொருளைப்பற்றி வெளி அறிவுபெற நாம் உழல் கிறோம். அனுபவ உள் உணர்வைப் பெற முயலுவதில்லை. ஜீவனுக்கும், ஈசுவரனுக்கும் உளள உறவு பின்னற் கோலத் துக்கும், நூலுக்கும் உள்ள உறவு. மெய்ப்பொருளின் அடுத்த மாறறம் தெய்வம். அதறகடுத்தது மனிதன். மெய்ப்பொருள் ஒருபடி உடனே இறங்கினுல் தெய்வத் தத்துவம். அதன் அடுத்த இறக்கம் மனிதனும். எனவே மனிதன் தெய்வமே என்று நாம் அறியலாம்; கோலம் உருவம் ஏற்ற நூலே என்ற கருத்திறகொப்ப.

வேதாநத சாஸ்திரப்படி எஙகும் ஊடுருவி நிற்கும் அந்த பரம மெய்ப்பொருள் ஒரு மாறுபாட்டையும் அடைவதில்லை. பருத்தி என்றும் பருத்தியேதான். அதன் உருவத்தில் ஒரு மாறு பாட்டை நாம் பார்ககிறோம். அதுவே ஒரு நிலையில் நூல் என்றும் ஆகிறது. நம் பார்வைக் (கோணத்துக)கேற்றவாறு ஒருமுறை அதைப் போர்வையாகப் பாரக்கிறோம். இங்கே நாம் அதன் ஸ்தூல உருவத்தைப் பாரக்கிறோம. கொஞ்சம் நெருங்கி நாம் அதையே பார்த்தால் 'நூலைப்' பார்க்கிறோம். இன்னும் நெருங்கினோமானல் 'பருத்தி தரிசனத்தையே' பெறலாம். 'பருத்தி தரிசனம்' ஆனபிறகு துணி, அதிலுள்ள கோலங்கள் இவற்றின் பன்மை மறைநது விடும். மிகவும் ஸ்தூலமான கணணேக்கில ஒற்றுமையே இல்லை. நூலைப் பார்க்கும்போது பன்மைத் தோற்றம் குறைகிறது. பருத்தியைப பார்க்கும

போதோ எல்லாம் ஒன்ருகி விடுகிறது அவ்விதமே அலை, நுரை, குமிழிகள எல்லாம் சமுத்திரமேதான். சமுத்திரம் அடிப்படை உண்மை. அதில் இருந்து பார்த்தால் 'பல' என்ற எண்ணம் மாறுகிறது. மாறுபாடே இல்லை என்ற உண்மை தெளிவாகிறது.

ஒவ்வொரு ஜீவனும் அதன் போக்குக் கேற்றவாறு உருவம் உடல் எல்லாம் பெற்று இருக்கினறது. அதனுல் பல பெயர்கள் இட்டுத் தனித்தனியே அழைக்கிருேம். ஆனுல் உண்மைத் தத்துவம் ஒன்றேதான். அதன் அடிப்படையில் நின்று பார்த்தோ மானுல் ஒரே மெய்ப் பொருள்தான் உண்மை. அந்தக் கருத்தில் உறவு என்ற பேச்சே பேச வேண்டியதில்லை. இரணடு தனித் தனிப் பொருள்கள் இருந்தால் அல்லவோ உறவு என்ற பேச்சு எழும். நூலுக்கும், பின்னலுக்கும் உறவு எனன? இரண்டும் ஒன்றே என்றுதான் உண்மை பேசும். பொன்னுக்கும், பொன் மோதிரத்துக்கும என்ன உறவு? அதே போல் எனக்கும், ஈசுவரனுககும் என்ன உறவு? "நான்தான் அது." அது உணர முடியாததற்குக் காரணம நான் கொண்டிருககும் தப்பு எண்ணம். அதைவிட்டு என் உணமைத் தத்துவத்தை உணர்ந்தால் "நான்தான் கடவுள்," என்ற நிலை ஏற்படும்.

ஈசுவர தரிசனம் பெறும் அந்த உன்னத நிலையை அடைய வேண்டும். அதாவது எங்கும் பரவி நிற்கும அந்தப் பரம மெய்மையை முற்றிலும் உணரும் நிலையை அடைய வேண்டும். அதற்கு அன்பு பக்தி இவற்றின் மூலம் பகவானைத் தேடுவது இன்றியமையாத படியாம். ஈசுவர பக்திதான் இந்த நிலையை நமக்கு அளிக்கும். அது இன்றி உன்மையை ஒருவாறு அறிவது கூட இயலாததாகிவிடும். கோவில், கீர்த்தனம், சத்சங்கம் என்கிற மதம் காட்டும் பயிற்சிகள் மிகவும் தேவையானவை. உண்மையைச சேரத் தவிர்க்க முடியாத பாதைகள். இந்தத் தெய்வ உறவு மனத்துக்கு ஆகியவுடன் மேலும் உண்மை அறிய வேண்டும என்று ஒரு தாகம் ஏற்படுகிறது. தொடர்ந்து விசாரணையை நடத்துகிருேம். சத்சஙகம் சொல்லித்தந்தபடி நாம் அதுவே எனருல் இநத மாற்றங்கள் வேறுபாடுகள் எவ்வாறு எங்கிருநது ஏன் வநதன என்ற ஒரு கேள்வி

மிகப பலத்துடன் எழுகிறது. வேதாந்தம் நமக்கு விடையிறுக்க முறபடுகிறது.

அதுமட்டுமா? இம்மாதிரி நூற்றுக்கணக்கான கேள்விகள் உபநிஷதங்கள் படிக்க முற்பட்டவுடன் எழுகின்றன. ஒரே யடியாக எல்லாக் கேள்விகளுக்கும் பதில் தேடுவது வீண் முயறசியாகிவிடும். படித்துச் செல்லும் பொழுதே பல புதிர்கள் விளஙகிவிடும். உபநிஷதங்களின் அருள் ஒளி அநேக ஐயங்களை நீக்கிவிடும்.

வேதாநதம் அந்த உண்மைப் பொருள் ஒருமைத்தன்மையில் எநத மாறுதலேயும் ஏற்பதாக ஒத்துக் கொள்வதில்லே. நம் மனதின ஒரு அர்த்தம் புரியாத குணத்தால் நாம் மெய்ப் பொருளில் பொயயான பன்மையைப் பார்ககிறோம். இருட்டில் வழிபபோக்கன் கயிற்றில் பாம்பைப பார்க்கிறுன். விளக்குத் தூணைப் பூதம் என்று முடிவு செய்கிறுன். இப்படிப் பொய்த் தோறறததால உண்மைத் திரை இடும் சகதியை வேதாந்தம் மாயை என்று அழைககிறது.



# கர்மத்தின் சட்டம்

கர்மத்தின் சடடத்தை விதியின் சடடம் என்று தப்பாய எண்ணுகிறாகள். இரண்டிற்கும் ஏராளமான வேறுபாடுகள் உண்டு. கர்மத்தின் சட்டமும், விதியின் சட்டமும் ஒன்ருக இருந்தால் ரோம, எகிப்திய நாகரீகங்கள்போல் நம் நாகரீகமும் என்ரே அழிநதிருக்கும். "விதி" என்ற பேச்சு மனித இதயத்தைத் தொலேத்துச் சற்று நேரத்துக்குள்ளேயே மனிதனே ஒன்றுக்கும் உதவாதவஞக ஆக்கவல்லது. ஒரு தேசம அநதப பேச்சை நமபிஞல் சீககிரமே அது வீழ்ச்சியடைந்து குறுகிய மனிதரும் சோம்பேறி மிருகங்கள் போன்றவருமான மக்களேக் கொண்ட நாடாக ஆகிவிடும்.

அதற்கு மாருக கர்மத்தின் திட்டத்தை நம்புகின்ற தேசத்தின் மக்கள் ஆன்மீக பேராற்றல் கொண்டவர்களாகவும, துடிதுடிப்பு கொண்டவர்களாகவும் இருப்பார்கள. சும்மா இருததலுக்கும, செயலே ஒழித்திருத்தலுக்கும் எவ்வளவோ மாறுபாடு உண்டு. காட்டில் இருககிற சந்நியாசி சும்மா இல்லே; அவன் கையாலாகாதவன் இல்லே. துடிப்புள்ளவன்தான. ஆனுல செயலே ஒழித்து இருக்கிருன. சுயநலத்தில் எதையும் தாஞக ஆரமபிப்பதில்லே. அவ்வளவுதான்.

கர்மச் சட்டத்துக்கு அடிப்படை: "இநத வாழ்ககை இத்துடன் முடிவடையககூடிய ஒன்றல்ல; நம்முடைய நித்திய வாழ்வில் ஒரு சிறு சம்பவம்" என்ற தீர்ந்த முடிவுதான். நம்முள் ஒவ்வொருவரும தனித் தனிக் குணம் பெறறுத தனித் தனிப் போக்குப் பெற்றிருககிரும். இநத வாழ்வுதான ஆரம்பமும, முடிவும் என்று இருககுமாஞல் எலலோருடைய வாழ்க்கை அனுபவமும் ஒரு மாதிரியாகவே இருந்திருககும்.

நாம் உண்மை அலலது மெய்ம்மையிலிருநது இநதப் பெரும ஆபத்தான தப்பெண்ணத்தில விழுநதுவிட்டதாக வைத்துக்

கொள்வோம். அப்பொழுது இந்த ஒரேமாதிரியில்லாத உலகம் எப்படி ஏற்படும்? தனித்தனி ஜீவன் தனித்தனி இன்ப துன்பங்களை எபபடி அநுபவிக்கும்? நன்கு சிந்திப்போமானுல் தனித் தனிக் காரணங்களினுல் நம் பிறவி காரணங்களுக்கேற்ற பயன்களாக உரு எடுத்திருக்கிறது என்ற முடிவுக்கு வருவோம். முடிவுகள காரணங்களை ஒத்தேதான ஏற்படும். நாம் வாழும் இநத வாழ்வு நாம இதுவரை எடுத்திருப்பதும், இனி எடுக்க வேணடியதுமான பல அவதாரங்களுள் ஒன்றேதான். சாவிலிருநது பிறப்பு, பிறப்பிலிருந்து சாவு என்று அந்தச் சுழல் நகாந்துகொண்டே இருககிறது. நாம் அதையெலலாம கவனிப்பதிலலை. வாழ்கககையை ஒரு குறுகிய கோணத்திலிருநதே பார்க்கிறோம். படம் ஒனறை நன்கு பாாககவேணடும் என்றுல் ஒதுங்கி, சற்றுத் தொலைவில நினறு பார்ப்பதுதான நலலது. அதேபோல் வாழ்வதை அறிநதுகொளள, மொத்த வாழ்வை நன்கு புரிந்து கொள்ள இநத வாழ்க்கையிலிருநது சற்றுத் தனித்திருந்து பாாக்கவேணடும்.

சில சமயம் நாம் "ஐயோ, என் தலைவிதி" என்று நொநது கொண்டு படைத்தவனையும் இழுததுப் பழிக்கிறோம். சிருஷ்டியில் ஒரு (இழுக்கும்) சங்கீத லயம இருபபதைத் தெரிநது கொள்ளுதல் வேண்டும். சூரியன், சநதிரன், நக்ஷத்திரங்கள் எல்லாம் தத்தம் வழியில் மாருமல் செல்கினறன. எஙகும் இந்த "லய"த்தின் சட்டத்தின் வேலை செய்கிறதை ஒத்துக் கொள்கிறோம். வாழ்க்கையில மட்டும் தான் ஒரு திட்டம் இல்லை. லயம் இல்லை. நேர்மை இலலை என்கிறோம்.

அது உண்மை இல்லை. காரணஙகளின் பயன்கள் நாம். காரணங்கள் மாறியிருநதால் பயன்களும் அவ்வாறேதான் இருக்கும். நாம் எல்லோரும் முன்னுல் செய்த செய்கைகளின் இககாலத்திய பிரதி பலன்கள். "சஞ்சித கர்மங்கள்" என்கிற பூர்வ ஜன்மச் செயல்களின் விளைவுகளின் பெட்டகமே நம் வாழ்வு. வாழ்க்கையை வாழ்ந்த பிறகு இநத வாழ்க்கையில் நமக்குப் "பயன்களாக"ப் பெற்றவை "பிராரப்தமாகும்."

வாழ்வு முடியும்போது சஞ்சித கர்மத்தின் முற்றிய பகுதிக் கேற்றவாறு அடுத்த வாழ்வு எடுக்க வேண்டியிருக்கும. புரியும் படி ஒரு உதாரணம் எடுத்துக் கொள்ளலாம. ஒரு நிலத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து ஒன்றில் தென்னை நாற்றுக்களை, மற்றொன்றில் வெண்டை விதைகள், மூன்ருவதில் மாஙகன்றுகள் நடுவதாக வைத்துக் கொள்வோம். பயிராகிப் பலன்தரும் விதத்தில் ஒவவொரு வகையும தனித்தனி கால அளவையும, முறையையும் பெற்றிருக்கும். அதே போல நமமுடைய ஒவ்வொரு செயலுக்கும் பயன்தரத் தனித்தனிப் பயனைக கொண்டதாகயிருக்கும். சில செயல்கள் உடனே பயன் விளைந்துவிடும். மற்றும் சில கால தாமதம செய்யும்.

கடந்த காலச் செயல்களின் பயன்களைச் துன்புறவோ ஒவ்வொருவருக்கும் தகுந்த இன்பதுன்பங்கள் தேவைப்படுகின்றன. அவற்றிற் கேற்றவாறு " இடமும் " தேவைப்படுகிறது. அதாவது ஒரு உலகம் வேணடும். உலகம என்ருல் அதன் சிறப்புப் பொருளில் " உலகம் " எனறு கருத்து. தன் உள் அனுபவங்களை வாழ்கிற குறிப்பிட்ட உலகத்தை அது குறிக்கிறது. புற உலகப பொருள்கள் ஒனருகவே இருக்கும் பொழுது தனி உலகம வேறு வேறு இருககும். சொல்லின் பொருளில் உலகம என்பது அனுபவ உலகம்தான்.

பிராரப்தம் என்ற சொல்லையே, தான பெற்ற தோல்விகளை, தன்னிடமுள்ள ஆற்றலினமை முதலியவறறைக குறிக்க உபயோகப்படுதநி அதறகுத் தபபாத்தம கற்பிக்கபபட்டிருக்கிறது. இநத கருததில் நம்பிக்கை வைத்தால் சுயமுயறசி செய்து சுய வளர்சசி பெற முடியாது. சிலர் 'கடவுளிடம எனககு நம்பிக்கை இலலாததும் பிராரப்தமே!' எனறு தேறறிக கொள் கிருர்கள். இது தோல்வி மனபபானமை. தோல்வி மனப பான்மை முன்னேற்றத்தை தடுத்துவிடும். நமபிக்கை கொண்ட ஊக்கம் தேவை என்று வசிஷடர் ஸ்ரீராமசசந்திரனுககு யோக வாசிஷ்டத்தில் அடிக்கடி எடுத்துக் கூறுகிருர். யோக வாசிஷ்டம் வேதாநதத்தின் சிறந்த கிரந்தம். ஸ்ரீராமச்சநதிரன் வசிஷ்டரிடம

நடத்திய விவாதங்களையும், வசிஷ்டர் தந்த பதில்களையும் அடுத்துத் தன்னுட் கொண்ட சிறந்த நூல் அது. அதை 'வாதத்தையும் தழுவிப் பேசிக்கொண்டே வாழ்க்கையின் உள் சத்தற்ற தன்மையை உணாந்து முனனேறப் புருஷார்த்தமும் தேவை' என்று அந்த மகரிஷி வலியுறுத்துகிறுர்.

பிராரபதம் நம் செயல்களை யெல்லாம நடத்திச் செல்கிறது என்றுல் பிறகு புருஷார்த்தம் என்ற பேச்சு எப்படி வரும்? தெய்வம நமக்கு முழுச சுதநதிரமும் தரவில்லை என்பது உண்மை தான். உதாரணமாக, நாம ஒரு தண்டவாளக் கம்பியை வளைக்க முடியாதுதான. ஆனுல அதை மற்ற சாதனங்கள் கொண்டு அடித்து, வளைத்துவிட முடியும். கயிறறில் கட்டிய பசு, மைதானம் முழுவதும் மேய முடியாதுதான். ஆனுல முளையைச சுறறிலும் ஒரு வட்டம்போட்டு அதறகுள் எங்கும சுற்றுவதற்கு அதற்கு சுதநதிரம இருக்கத்தான செய்கிறது. அதைப்போல மனித னுக்குப் பிராரப்தம் ஒன்று இருநத போதிலும் அதற்குள்ளேயே சுதந்திரத்தை நன்கு பயன்படுத்தி, முயற்சி செய்து, வாழ்க்கை யின பராலட்சியத்தை அடைய உழைக்கலாம்.

உண்மைதான். நம் கர்மங்களின் பழுத்த பகுதியான பிராரப்தத்தின் கட்டுக்குட்பட்டுத்தான் நாம் பிறவி பெற்ருேம். எனினும் சிநதித்துச் செயல புரிய நமக்கு ஒரு சுதந்திரம இருககத் தான் செய்கிறது. உதாரணமாக 'சத்சங்கத்திற்குப் போவோமா, படம பார்க்கப் போவோமா?' என்று முடிவு செய்ய நமக்குச் சுதந்திரம் இல்லையா? வாழ்க்கையில் எப்பொழுதும் இதுவா, அதுவா, இந்த வழியா, அந்த வழியா என்ற பிரசினை எழுந்து கொண்டே இருககிறது. எது என்று முடிவு செய்வதும் மிகவும் கஷ்டமாக இருககிறது. நல்ல வழி, சுகமான வழி என்ற இரண்டு பாதைகளின் சந்தியில் நின்று நாம் தயங்குகிருேம். நம் உள்ளே "சனியனுக்கும் பகவானுக்கும்" போட்டி. இனிமையான வழி அன்று இன்பம் தரலாம். நாளாவட்டத்தில் அது முழுத் திருப்தி யையும தராது. இதுவே எல்லோருடைய அனுபவமும். இது வரை முழுத் திருப்தி யளித்த சினிமாப் படத்தை யாராவது பார்த்த

துண்டா ? இன்னம் நல்ல படம் இனித்தான் வர இருககிறது ! ஆனுல் நல்ல வழியை அடைந்தவன் அமைதி அடைகிருன். சத் சங்கத்துககு வந்தவன் மன அமைதியும் பெற்று, வாழ்க்கையை யும் தன்னையும்பற்றி சில நலல சேதிகளேத் தெரிநதுகொள்கிருன. முட்டும் ஏமாறறங்களே அடிக்கடித தன் வழியில் பாாததுப பிறகு நலல வழியில் போயாக வேண்டும் எனறு முடிவு செய்கிருன.

மனது மெழுகுபோல அமைநதிருக்கிறதுபோலும. அதைத் தாண்டிச் செல்லும ஒவ்வொரு எண்ணமும் சுவட்டை விட்டுச் செலகிறது. ஒரே மாதிரியான எண்ணஙகள கீறல போனற ஒரே சுவட்டை வாய்ககால் போல ஆக்கி விடுகிறது. அடுத்த எணணம அதனூடே பாய்வது சுலபமாகிவிடுகிறது. ஆகவே நலல எண்ணஙகள் எண்ணிப பழகிவிட்டால் மீண்டும் நல்ல எண்ணஙகளே எழுகின்றன. நல்ல குணம் ஏற்படுகிறது. பிறகும் அடகக முடியாதபடி நல்ல எண்ண அலேகளே எழச் சாத்தியமாகிறது.

மனம் செயல்படும் முறையை அறிநதுகொளள ஒரு உதாரணம் பார்க்கலாம. கோபமடைவது உன குணம் எனருல முதன்முதலில் அதற்காக வருநதி இரககபபடும பழககததை ஏறபடுத்திக் கொள்ளவேண்டும். கொஞ்சம கொஞ்சமாகக் கோபம் மறையும. ஆனுல் மறைநத கோபம் அப்படியே தங்கினுல் நலலதல்ல. ஆகவே அந்த ஆற்றலே வேறு நல்ல பயன தரக்கூடிய வகையில் திருப்பிவிடவேண்டும். பிராரபதம் என்று சொல்லிக்கொணடு கோபம் என்கிற பலவீனத்துக்கு இடம் கொடுக்ககக்கூடாது. முதலில் நீ அறிநது கொளளவேணடும். உன் பலவீனத்தைப் புரிந்து கொள்ளவேண்டும. மனிதன அவன் மனதுதான். எதனுல் மனது ஆகியிருககிறதோ அது தான் மனிதன். சிலசெயல்களேத் திரும்பத் திரும்பச செய்வதனுல் செய்பவன் மனதில் அவற்றிற்கேற்ற குணம் படிநது விடுகிறது. புறவுலகப் பொருள்கள் நமக்குத் தரும் அனுபவங்கள்தான் நாம வாழும் உலகம். அநத அனுபவங்களே ஏற்கும் மனதின் தன்மைக் கேற்றவாறுதான் அனுபவத்தின் குணமும் அமையும். ஆகவே

நாம மனதில் எண்ணங்களேயும காரணக கருத்துக்களேயும் அடககித் திருததி வைததிருந்தோமானுல, நாம் அதைச் சுத்த மடையச் செய்து விடுவோம்.

நம் வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் நடந்த செய்கைகளின் பலனே அனுபவிப்பது மட்டுமலலாமல் நாளேக்கென்று பலன் தரச சில செய்கைகளேயும் செய்து கொண்டிருக்கிருேம். பிரா ரப்தம்தான பழைய செய்கைகளின் பயன். அது வருத்தம் அளிககக் கூடியதாக இருந்துவிட்டது. போகட்டும். இனி யாவது வரும காலு வாழ்வு, சந்தோஷம் உளளதாக அமையத் தகக செயலகளே இப்பொழுது புரியலாமலலவா?

விதியைபபற்றிய நம் பேச்சு, பிராரப்தக் கட்டுக்குள அடங்கிய நமக்குப புதிதாக நல்ல கருமங்களேச செயய சுதந்திரம் எவ்வாறு கிடைக்கும் எனறு பேசுவதில்லே. அதனுலதான் நம் நம்பிக்கை அழிகிறது. தோல்வி மனபபான்மை எழுந்து நம மூசசை அமுக்குகிறது. ஊக்கம், உற்சாகம், செயல்வெறி எல்லா வற்றையும் போக்கிச் செயலபுரிய ஆற்றலற்ற ஒரு மிருகமாக ஆக்கிவிடுகிறது.

இன்று தெய்வ வாழ்வு வாழ்ந்தால் மட்டுமே நாளே நமக்கு நலல வாழ்வு கிட்டும். மதம் அத்தகைய வாழ்வை வாழச் சொல்லி அதற்கான வழிகளேச் சொல்கிறது. அதனுல் இந்த வாழ்விலும, வரும் வாழ்விலும் நம் தெய்வீகச செயல்களின் பயன் கிட்டும. குறுகலான, முள் நிறைந்த தப்பான பாதையை விட்டு மதம் தரும் நேர்ப் பாதையில் செல்வாயாக. முயறசியுடன் வழுவாமல் அதே பாதையில் செல். பரம லட்சியத்தை அடைய லாம. பாதை சரியாக இருந்து ஒழுங்காகப் போனுல் முடிவான அந்தப் பரம்பொருளே அடையலாம். எனவே கர்ம பந்தத்தின் சட்டம் நம் வேதாந்தத்தின ஆற்றல் தரும் நல்ல ஒரு சக்தியாகும். நம் வாழ்வை நாமே கட்டிக்கொள்ள அது வாய்ப்பு அளிககிறது. நம்மைப் பலமற்றவர்களாக துயருக்கும் குறுக்கலுககும் உட்பட்டு வாழ எனப படைத்துவிட்டார கடவுள் என்று ஒரு கடவுளேச் சொல்கிருேமே அநத கொடுங்கோலரான கடவுளுக்கு (!) அடிமை

யாக நாம் இருக்கவேண்டியதில்லை. பலமற்றுத் துயரில் தொல்லை யுறுகிறோம என்றால் அது நாம் செய்துகொண்டதே யாகும். அறியாமையினால் நாம் முனனாளில் வாழ்க்கையின் எதிர்மறைக் கருத்துக்களுக்கு மதிப்புத் தந்து அவ்வண்ணம் செயல்களை புரிந்தோம். அவற்றின் பயனுக்கேற்ற அனுபவங்களைப் பெறத் தக்க அமைப்புகொண்ட வாழ்வைப் பெற்றோம்.

கவலை கொள்ளவேண்டாம். ஊக்கம் கொள்ளுங்கள். இன்றைய வாழ்வை நேர்மையாக்கு. அன்பு, தயை, பிறர் குற்றம் பொறுத்தல் முதலிய தெய்வீகக் கருத்துக்களின மதிப்பறிநது வாழ். வருஙகால வாழகையின் அமைப்பு நனறாகிவிடும்.

பிராரப்தம் செனற நாளின் புருஷார்த்தத்தின் பயன், ஒரே பொருளதான் காலததிற் கேற்றவாறு புருஷார்த்தம் எனறும பிராரப்தம் என்றும் பெயர் பெறுகிறது.

தானே தனககுப் போலீஸ்காரனாக இருநது உன்னிடம உள்ள குறைகளைக் கண்டுபிடி. முயறசியுடன அவற்றை ஒழி. வருங்கால வாழ்வுககு நீயே கடவுளாக இரு. ஆம், கடவு ளாகவே ஆகிவிடுவாய.



# மனிதன் உயர்வும் தாழ்வும்

உபநிஷதங்கள, "நீயே அது" என்று பேசுவதில ஐயம கொண்டு பேசுவதில்லை. இருநதும நம் வாழ்ககையோ மாறுன உண்மையைக் குறிக்கிறது. நாம் கட்டுண்டு நிற்கிறோம், சஙகடப் படுகிறோம. அதற்கு விளக்கமாக வேதாநதம் இவை எல்லாம் உண்மை அலல என்று குறிககிறது. புறபபொருள உலக அனுப வம தோற்றமே. கயிற்றில் கண்ட பாமபு எவவளவு உண்மையோ அவ்வளவு உணமைதான் அது. கமபத்தில் பூதம, பாலையில் நீர் எலலாம மயககத்தில வந்த தோற்றமே. அதே போல் சச்சிதா னந்தப் பொருள்தான் உணமை. ஜீவன் என்ற எணணம் உண்மையினமேல் ஏற்றுவித்த பொருள. பொய்ப் பன்மை மயககமே. ஒனறுதான உணமை; மெய்மை.

அவிதகை காரணமாக நாம மயஙகுகிறோம். இது ஏன? இநதக் கேள்விக்கு விடையளிகக வேதாந்தம் 'மாயை'யைப் பறறி விளக்குகிறது. மாயை அநதப் பரம்பொருளின பிரிக்க முடியாத ஒரு சக்தி. நெருபபுடன் நீஙகாது நிறகும சூடு போனறு மாயை பரமபொருளுடன இணைநது நிறகிறது. நெருப்பு—சூடு. சூடே நெருப்பு எனபது போல் பரம்பொருள மாயை உறவு இருக்கிறது.

மாயையின் உண்மைப் பொருள் தெரிநது கொள்ள வேண்டும். இல்லை என்றால் வேதாநதம நம்மை ஏமாற்ற மாயை புரிகிறதோ என்று ஐயம் எழுநதுவிடும். மாயை என்ற சொல் லுக்கும், பொருள் இல்லாத ஒன்று (யோமா சாமாயா—) என்று ஆகும். மயக்கம் பெற்று கயிற்றில் பாமபையும், கம்பத்தில் பூதத்தையும், பாலையில் நீரையும் ஏற்படுத்தித்தரும் 'குணம்' ஒனறை மனது பெற்றிருககிறதோ அதைத்தான் மாயை எனகிறோம்.

நம்முடைய ஒததுழைப்பையும், இரககததையும் பெற்றே நம்மை ஏமாற்றும் மாயையை விளகக வேதாந்தத்திலிருநது பிரசித்தி பெற்ற சோமதத்தன் தந்தையின் கதை சொல்லப்படுகிற வழககம. அக்கதையை கவனிக்கலாம.

புதிதாகத் துறவு பெற்ற ஒரு சாது நீராட்ட யாத்திரையின பொழுது களைத்துச் சோர்ந்து கஙகைக் கரையில் நிழலுள்ள ஒரு இடத்தைக் கணடார். சென்று அங்கே கிடந்த ஒரு குறுகலான பாறைமேல் அமர்நது சிறு தூக்கம் ஒன்று போட்டார். தூககக் கலக்கத்தில் கங்கைக்கு நீர் எடுகக வந்த இரண்டு சிறு பெண் களைக் கவனித்தார். அவர்கள நீா எடுததுச சென்ற பிறகும் சாது அவர்களைப் பற்றிப பின்வருமாறு சிநதித்தார். நான் அவர்களுள் ஒருவரை மணந்தால்! 'ஒரு சிறு வீடு...... அதன் மூன்று அறைகள்...... வயலில் உழைத்துச் சாபபிடலாம். கடுமை யான கணவனுக இருப்பேன். சுக வாழ்வு வாழவேன்.....பிறகு கொழு, கொழு என்று ஒரு குழநதை பிறக்கும. அதற்கு சோமதத்தன் என்று பெயரிடுவேன. மூவரும் ஒரே படுக்கையில் படுப்போம். ஆம்! குழந்தைக்கு இடம் இருககுமா? தேவி, கொஞ்சம் நகர்ந்து இடம கொடு! "நான எப்படி நகர்வேன்? இடம்.ஏது? நீங்கள் நகருங்கள!" "சரி, நானே நகாகிறேன்..." பிரம்மச்சாரி நகாநதாா — விழுநதார் லொட் என்று! எங்கே? நேரே கஙகையில்! நலல வேளை. நீந்தத தெரிநதவர். நீந்திக் கரையேறினா. அன்பர்களே! அநதத் துறவி விழுநதது எதனுல்? விழித்தவுடன் அவர்தன மனைவியையும், பெணணை யும எங்கே தேடுவாா?

அந்த அப்பாவிப் பிரம்மசசாரி சோமதத்தனுககான உலகத தைக தனனுள்ளே சிருஷ்டித்தார். அதனுடன் ஒன்றினுர். கனவை நனவாகக் கொணடு விழுநது வைத்தார். அப்படியே தான் பரிசுததமான நித்திய ஆத்மா நாம்! ஆதமா உண்மையை மறந்து சம்சாரத்தைக கறபித்துக கொள்கிறது. விழியுஙகள். பொய்யுடன் ஒட்டும் குணத்தைச் சுருட்டி வையுங்கள். சுருதி யாகிற கங்கை நீரில முழுகி எழுங்கள். ஒரே அடியில் தெய்வீக மற்ற கனவை ஒழியுங்கள்.

சோமதத்தன் தந்தை குடித்தனம் நடததினனே—நடத்திக் கங்கையில் விழுந்தானே அதுதான மாயை. இல்லாத ஒனறை ஏற்படுத்திய மனதில் உளள அதன ஆற்றல்.

மாயை, சத்வ, ரஜஸ், தமஸ் (செயலொழித்த நிலே—செயல் நிலே, செயலாற்ருத நிலே) எனற மூன்று நிததிய குணஙகளுடன் உலவுகிறது. அவறறின் அளவு ஆளுக்கு ஆள நேரத்துக்கு நேரம் மாறி நிறகும்.

அந்தப் பரமப் பொருள், நித்திய ஞானததுவம் சுத்த தேவ குணப் பிரதானமான மாயையில் பிரதிபலிக்கும்போது அந்தப் பரமபொருளின தெள்ளிய, தெளிவான பிரதி பிமபம் கிடைக் கிறது. அதுதான் தெய்வ தத்துவம். ரஜஸ, தமஸ் இவறறுடன் கலநத மலின சத்வப் பிரதானமான மாயையில் பிரதி பலிக்கும் போது அது அகஙகாரத்தை மையமாகக கொண்ட ஜீவனுகிறது.

தெய்வதத்துவம் நம்மைச் சுற்றிலும் மூன்று வகைச் செய்கை களில் நிலவி நிற்கிறது. ஒவ்வொரு கணமும், அழிவும், ஆக்கமும், பிறப்பும், இறப்பும் இருந்து கொண்டே இருக்கினறன. தெரி யாத ஆரம்பம், நிர்ணயிக்க முடியாத முடிவு இநத இரண்டுக் குள்ளும் பொருள்கள் தரித்து நிற்பதையும் நாம் கவனிக்கிறோம். இந்த மூன்றையும சாதாரண மனிதன் புரிந்துகொள்ள நாம் அந்த மூன்று சகதிகளேயும் பிரும்மா—(சிருஷடி கர்த்தா) விஷ்ணு (காககும கடவுள) சிவன் (அழிப்பவன்) எனறு அழைக்கிறோம்.

பானேயைச் செய்பவன் 'என்ன செய்யப போகிறோம்' எனறு அறிதலவேண்டும. அப்படியே பிருமமாவுககும் 'அறிவு' தேவை. அதனுல்தான் அவர் அறிவுக்கும, வித்தைககும், தேவதையான சரஸ்வதியை மணநதிருக்கிருர். காபபாற்று பவனுக்கு அந்த வசதி தேவை. விஷ்ணு லட்சுமி தேவியைப் பெற்றிருப்பது லட்சுமி சம்பத்துக்கும, பொருளுககும் தேவதை யாக இருப்பதால்தான். சிவனுக்கும் அழிக்க அழியும் பொருள் வேண்டும. அவருக்கு அந்த வேலேயில் பற்றுக் கொணடுளள தேவி உமை—பிரகிருதி உதவி செயகிருள்.

மூன்றும் தனித்தனி தெய்வங்களாகக் காட்டப்பட்ட போதிலும் அவை தனித்தனி தெய்வ ஆற்றலே தவிர மூன்று தெய்வங்களும் ஒன்றே என்று புராணம் ஆத்மீகமாகச் சொல் கிறது. அந்தக் கீதத்தை நனகு உணாந்தவர்கள்தான் கேட்கிறார் கள். சத்குரு தத்தாத்ரேயர், குருக்களுககுக் குருவானவர். அவர் மூன்று தெய்வங்களையும் துர்க்கை தேவியில் லயப்படுத்தினா. பார்ப்பதறகுத தெய்வங்களுளளும் பன்மை இருந்த போதிலும அஙகேயும் ஒரே தெயவத் தன்மைதான் நிலவுகிறது. உண்மை யில் தனித்தனி ஒவவொரு தெய்வமும், ஒனறும் செயய இயலாது. சிருஷ்டி இல்லாமல ஸதிதிக் கடவுள் என்ன செயவார்? ஸதிதிக கடவுள் இல்லை யெனருல் சிவன் எதை அழிபபார்? அழிவு இருநதாலல்லவோ ஆக்கம் இருக்கும். ஆகவே அடிப்படைத தெய்வத் தத்துவம் ஒன்றே. பன்மை வெறும் மயக்கம்.

சுத்த சத்வ மாயையில் ஏறபடும் உணமைத் தத்துவததின பிரதிபிம்பம் ஈசுவரத் தத்துவம என்ருல அசுத்தமான சத்துவ மாயையில் உடைபட்டும மங்கலாகவும் ஏறபடும பிரதிபிம்பமதான 'தான் எனகிற கேநதிரம'. அதாவது சம்சாரியாகும். ரஜஸ்– செயலாகும். தமஸ் – செயலறற நிலையாகும். சூரியனைப பிரதி பலிககும் வாளியில உள்ள சாணி நீரை ஒததது 'ஜீவககனவை' ஏற்படுத்தும் இந்த 'இடைப்பொருள'. வாளி நீர் சுத்த மாயிருநதால் பிரதி பிம்பம் சுத்தமாகவும் அசஙகாமலும, உண் மையாகவும், தெளிவாகவும் இருககும. அலையும் சாணி நீரில அவவிதம ஏறபடமுடியாது.

தமஸ எனகிற தன்மை விகஷேபம, ஆவரணம எனற இரண்டு வகையில் தன குணததைக காட்டுகிறது. இநத இரணடும ஒன்றையொன்று ஒட்டியே இருப்பவை. தனித்தனி இருக்க முடியாதவை. ஆவரணம உண்மையை மறைக்கும திரை. (மூடி)யைபபோடுகிறது. (மறைககிறது) விக்ஷேபம சஞ்சலத்தை ஏறபடுகிறது. தமஸின ஆவரண சக்தி மூன்று விதமான "இல்லை" என்கிற வழிகளில் இயங்குகிறது. அதன் காரணமாகவே (i) எனககுத் தெரியாது. (ii) எனககுப் புரியவில்லை. (iii) நான் அனுபவித்த(உணர்ந்த)திலலை என்று

மூனறு இலலாமை அலலது அறியாமைக்குள் நாம சிக்குகிறோம். இநத மூனறு எதிர்மறை எணணங்களும் முறையே சிரவணம், மனனம, தியானம் (கேட்டல, சிநதித்தல், நிதித்யாசனம்) மூனறால் நீககப்படுகினறன.

இநத மூன்றும் ஆவரணம் தரும் மிகப் பெரும் துககங்கள். ஆவரணம் முதலாவதன காரணமாக; நம்மில் அபூாவமாகச் சிலர்தான தனித்தனியே சிந்தித்துக் கண்டு அலசி ஆய்ந்து மாறும் மாறிக கொண்டே இருக்கும் இந்தப் புறப்பொருள் உலகத்திற்குள்ளே ஒரு தெய்வத் தத்துவம் இருககிறது என்று அறிய அவாவைப் பெறுக்கிறார்கள். 'தெரியாது' என்கிற மிகவும் மொததையான ஆவரண நிலை நேரில் பெரிய ஆசாரியர் களிடமிருந்தோ அலலது அவாகளிடமிருந்து கிரந்தங்களின் மூலமோ கேட்டு நீக்கப்படுகிறது.

இந்த 'இல்லைப பொருள்' தொலைந்தவுடன் இன்னும் கொஞ்சம் சூட்சுமமான 'புரியவில்லை' என்கிற எதிர் மறைப் பொருள் எழுகிறது. புத்தி ஆர்வமாகச் சிந்திபபதாலும் காரண காரியத தர்க்கத்தாலும தாண்டப்படுகிறது. அபபொழுது முடிவே யிலலாத பெயாகள் தோற்றங்களின பன்மைகளுள்ளே ஒரு மையின் ஒரு தங்கக கமபி ஓடுகிறது என்று சாதகன் அந்த நிலையில் உணர்கிறான். அதுதான் ஆத்மனாகும். அநத நிலையில் சாதகர்கள் புத்தி பூாவமாக உணாந்த அந்தப் பொருளை அனுபவ மாக ஏற்காத காரணத்தால அலைவுறுகிறார்கள். அந்தத் தொலலை வேதாந்த சாதகனுக்கேற்பட்ட தியானத்தின் மூலம் தொலைகிறது. தியானததில் சாதகன் பயிற்சி மூலம் மனதை மாறுபட்ட பல எண்ணஙகளில் சறறுகூட அலையவிடாமல் ஒரே கருததில் இடையறாமல் நிறுத்தப் பழகிக் கொள்கிறான். அதன் எல்லையில மனது பூாண அமைதியை அடைகிறது. தூக்கத்தில் ஏறபடுவதுபோன்ற ஒரு நிலை எனறு அதைச சொல்லலாம். ஆனால இஙகே பூர்ண உணர்வும் ஒளிவீசிக் கொண்டு நிற்கும். இநத சித் ஞான நிலை என்கிற சவிகல்ப சமாதி நிலையில சாதகன ஆவரணத்தில் கடைசிக கொழுந்துவரை கிள்ளி எறிந்து விடுகிறான்

தமஸின் ஆவரண சக்தியைப்பற்றி இவ்வளவு நேரம் பேசினேம். இனி விக்ஷேப சக்தியைப்பற்றி அறிந்து கொள்ள லாம். இதிலிருந்துதான் வெளித்தோற்ருத உலகம் உணர்வுக்குள் மறைந்து நின்ற உலகம் எழுகிறது. அந்த உலகிலிருந்து ஐந்து மூலததததுவங்களின புறபபொருள் உலகம் எழுகிறது. இநதத் தததுவங்கள கலநதுதான் பெயர்களும், தோறறமும் ஞான சகதி, கிரியை சகதி யுளபட எல்லாம் ஏற்படுகின்றன. அவை எல்லாம் சேர்நதுதான் இநதத் துயரின் கையாலாகாத மூட்டையான மனிதன் என்கிற சம்சாரி ஆகிருன்.

நித்ய சுத்த முற்று பரமாத்ம நிலையிலிருநது சோமதத்தன் தந்தையைப் போல மாயையின் சூழலால் நாம் நம்மைக் கட்டுக் குள்ளாக்கிக் கொள்கிரும். மணமாகாத மனைவி, பிறக்காத குழந்தைகளுககாகக கட்டாத குடிசையில் வசித்து இடம்தர நகர்ந்துகொண்டிருக்கிரும் !

வேதாந்தம் வீழ்ச்சிக் கதையின் அழுமுக ஆலாபம் மட்டும் அல்ல! இல்லாத ஒன்றை ஏறறுககொள்ளும் வீழ்ச்சியின் அசட் டுத்தனத்தை விவரிப்பதிலேயே விழித்து அந்த நித்திய சுத்த நிலையான "ஞானம்" அடையும் வழியும் காட்டப்பட்டி ருக்கிறது.

உலகத்திலுளள மதங்கள, ஹிநது மதத்தில் சொல்லப்படுகிற யோகஙகள எலலாமே ஆரம்பத்தில் மாறுபட்டுக் காணப்படலாம். ஆனல அவை எலலாம ஒரே குரலில் ஞான காமேந்திரியஙகளை அடககியாள வேணடும என்றுதான் பேசுகின்றன. உள்ளும், வெளியும தன்னடக்கம். அதுதான் எல்லா மதஙகளும் ஒத்துப் பாடும தெள்ளிய பலலவியாம. ஆனல் ஆத்திரத்துடன் அடக்கி விட்டதால் இநதத தன் அமைதி ஏற்படாது. நம்மிடமுள்ள இந்த இராவணனின பதது்த் தலைகளையும் நம் உள்ளே உள்ள ராமர் அமபுகூட வாங்கிவிட முடியாது. ராமபிரானுக்கு இராவணனைக் கொல்ல அவன் உள்ளே ஒளிந்திருநத அமுத கலசத்தை முதலில உடைத்து விழவைக்க வேண்டிருந்தது. அது

அபபடியே இருநதவரை பிரும்மாஸ்திரமகூட அந்த ராட்சதனைக் கொல்ல முடியவில்லை.

அறியாமை வளாககினற ஆசைகளின் கலசம் நம்முள் மிக ஆழத்தில் இருக்கிறது. அதற்கு மூலமான அவித்தையை அழித்தால ஒழியப் புலனகளை அடக்கமுடியாது. பிரமை கொஞ்ச மேலும் இருக்கும் வரையில் ஆசைகள எழும்பிக்கொண்டேதான் இருககும். அவைகள் இநதிரியஙகளை அவ்வப பொருளகளில் அலையுமபடி தூணடிக் கொணடேதான் இருக்கும். ஞானத்தால் தான் நாம அவித்தையை அழிக்க முடியும். அதாவது நம்முடைய மெய்மை தெரியவேண்டும். 'சிவோஹம' எனறு உணர்தல் வேணடும். 'நான் அந்தச் சினமயப பொருள், இந்தப் பெயரும் உருவமும் கொணடதலல ! அகணடமான சுதத அறிவுத தத்துவம் !' என்று புரிந்து கொள்ளவேண்டும். அபபொழுதுதான ஆசைககு வித்தான பிராநதி அலலது அவித்தை தீரும்.

சுத்த அறிவு நமமுடைய நித்திய சொரூபம்தான். அதை நாம் படைத்துவிடும ஒரு நிலையாகக கொளளமுடியாது. மேகம் என மறைததுக குழபபம் ஏற்படுததி மயககி நிறகும் அவித்தையை நீககி விடலவேண்டும். மேகஙகளுக்குப பினனல் இருககும சூரியன அதன முழு ஒளியுடன பிரகாசிககத தொடங்கி விடும. இநத மேக நீககமதான் கேட்டுச சிநதிததுத் தியானம் செயவதன மூலம நடககவேண்டியிருககிறது. நாம தமஸ் என்ற சக்தி நம்மை என்னெனன பாடுபடுத்துகிறது எனறும வேதாநத சாதனைகளான சிரவணம், மனனம, தியானம மூலம் அதன சாதககளை வேரறுககலாம என்றும பார்த்துவிட்டோம்.

சாதகன மனன நிலைக்கு வரும்போது புலன் நாடும் புறப் பொருளகளில் போலி இனபத்தைத் தேடுவது வீண் என்று அறிநதுகொள்கிறன. அங்கே புலன அடககம தொடங்குகிறது. புறப் பொருளகளை நாடி மனம் பெறும அலைவுகள குறைய ஆரம்பிககினறன. இதிலிருந்து ஆயிர மடஙகான இன்பம், அமைதி துலா நிலை (சமநிலை) கிடைககின்றன. இதன் பயனுக அவன் தியானம உயர்கிறது. ஏகாகர சகதி (மனதொருமை)

கூர்மையும் வலிவும் பெறுகிறது. ஆவரணம் அடக்கப்பட விக்ஷேபமும் குறைகிறது. விக்ஷேபம் குறையக் குறைய ஆவரணம் சுருள்கிறது. இரண்டும் ஒன்றுக்கொன்று இணைந்தே வேலை செய்கின்றன. அப்பியாசம் ஏற ஏறத் தமஸின் தொல்லை தரும் இந்த இரட்டைச் சக்திகளும் அடக்கப்பட்டு ராஜஸ தமஸக் குறைகள் அடங்கி நம்முள் சாத்வீக குணம் ஏறும்.

சுருதி மந்திரங்களைக் கேட்டு அவற்றை மனதிலே ஏற்றுச சிந்தித்து அவற்றைப் பற்றி இடைவிடாமல் தியானம செய்வதால நம்முடைய மன ஏரியின் அலைகளும் கலஙகலும் நீக்கப்படு கின்றன. அப்பொழுது நித்திய தத்துவமான அநத உண்மைப பொருள சுத்தமாக எதிரொளி பெறுகிறது. அந்தத தத்துவத்தின் முற்றிலும் உண்மையும் சுத்தமானதுமான பிரதி பிம்பமே தெய்வத் தத்துவமாம். ஆகவே சாதகன் இந்த நிலையில் தெய்வத் தன்மையையும் கடவுள் தன்மையையும வெளிபபடுததுகிறான். அவனால் அற்புதஙகள் செயய முடியும். அவனுககு அருள் இயற்கையாகும். கருணை அவன் இயற்கை உணாவாகும். அன்பு அவன் மூச்சாகும். தயவு அவன் சாரப பொருளாகி உண்மை அவன் நடத்தையாகி ஈசுவரத்துவம் பிறப்புரிமையாகி நிற்கும். அவன் ஏழையோ, பணக்காரனோ, அழுகிறானோ, சிரிக் கிறானோ தேக நலம் உண்டோ இல்லையோ, தெயவ மனிதனாக வாழ்கிறான். பிறருக்கு வழியும் ஒளியும காட்டி ஆளுவான்.

சாதனையின் இந்த நிலையும மீறவேண்டும். ஞானம் பெறறு அநதப் பொருளாக ஆகவேண்டும் என்று ஆசைத் தீ அணையாது பெருகவேண்டும். தெய்வீக ஆனந்தஙகளையும, அமைதியும் கூடப் போதாது எனறு விடவேண்டும். அப்படியானால் தியானத் தின் உச்சியை அடைந்து ஒருவன சத்வாதிதனால் ஆகி பரம உண்மைப் பொருளைத் தன்னுள்ளேயே உணர்ந்து தானே அதுவாக ஆகிறான். "ஓமை" அடைந்து "ஓமில்" அடங்கி ஓமாக ஆனவுடன அவன் பரமபதத்தை, எல்லைக்கும் எலலையை பூர்ணத்வத்தின் இறுதி முடிவை, பூர்ண ஆனந்தத்தை அடை கிறான். அவனில்தான் எல்லாம தங்குகின்றன. உலகம அவனி

லேயே எழுந்து அவன் புறமாகவே நகர்ந்து முடிவில் அவனி லேயே முடிவடையும் அவனுகவே மாறிவிடும்.

ஆகவே இந்திரிய நிக்ரஹம இல்லாமல் ஆன்மீக வளர்ச்சி இல்லை. சிரவண, மனன த்யானம் இல்லாமல் புலனடக்கம் பயன பெருது. உபநிஷதங்களைப் படியுங்கள். தனியாய்ச் சிந்தி யுங்கள். தியானம் செயயுங்கள். கையோடு புலனடக்கத்தை யும் கற்றுகொள்ளுஙகள். சாதனையைக் கெட்டிக்காரத்தனமாகத் தொடருங்கள். வெற்றி உஙகளுடையதே. சுருதிகள இங்கே இதோ இப்பொழுதே என்று உறுதி கூறுகினறன. பொறுமையும், நம்பிக்கையும் கொண்டு சேவை செய். அன்பு செய். சுத்தம் பெறு ; தியானம் செய். உண்மையை உணரு—அதுவும் இந்த ஜன்மத்திலேயே.



# உபநிஷதங்கள்

வேதாந்திகள் வேதம் அழியாதது, என்றும் உள்ளது என்று நம்புகிறார்கள். இன்றைய படித்தவர்களுக்கு இது நமப முடியாததாய் காதுக்குக் கரகரப்பை ஏற்படுத்தலாம். ‘ஏகாதிபதியின் ஆணைச் சொல்லோ இது’ என்று எதிரவாதம செய்யலாம். ஆனல் நன்கு கவனிததால் வேதாந்த மேடையிலிருந்து வீசப் பட்ட ஏகாதிபத்திய ஆணையல்ல இது என்று விளங்கும். வேதம, வித்-அறிதல் எனற பகுதியிலிருந்து வந்த சொல். அறிவு என்றும் அழியாதது. வேத புத்தகங்கள் அழியா எனற கருத்தில் அது சொல்லப்படவில்லை. ஆத்ம அறிவு அழியாதது தான். ஆனல இதையும் சிலர் ஒபபுக்கொளள மறுக்கலாம்.

ஒரு உதாரணத்தின்மூலம் இதை விளக்கலாம். குருத்வ கேந்திர சக்தி (பூமி பொருளைத் தன்பால் இழுககும சகதி) என றும் உளளது என்று சொல்வதில் என்ன தபபு? நியூடனமேல் ஆபபிள்பழம விழுந்து அவன் கணடுபிடித்த, அன்றிலிருந்து தானு இந்த சகத் வேலை செயகிறது? அது அதற்கு முன்பும் மௌனமாக இயங்கிக் கொணடுதான இருநதது. நாம் அதை மறந்தாலும், மறந்த பின்பும, எனறும இருநது கொண்டுதான் இருககும். அதுபோலவே மினசகதியோ, அணுவின மூல சக்தியோ நிததியமானதுதான. அநதக கருததிலதான் வேதம் சொல்லும் உண்மை நித்தியமானது. வேத நூல்கள் அழியலாம். ஆனல் உபநிஷதப் பொருளான அநத நிததியப பொருள அழியாது. இன்றைய படித்தவர்கள் உண்மை யறியாமல் உபநிஷதங்களை ரிஷிகளுடைய விநோதக் கற்பனைகள் எனறு பேசலாம். நன்கு ஆய்ந்து உட்பொருளை உணர்நதவர்கள் அப்படி என்ருர்கள். உபநிஷதங்களில நலல நம்பிக்கையே கொள்வார்கள்.

உபநிஷத ரிஷிகள் தீர்க்கதரிசிகள், உலகில நெடுங்காலம் உழன்றவர்கள். தொல்லையினிடையேயும் உள் அழைபபைக்

கேட்டார்கள். உண்மையைத் தேடித் தன் யாத்திரையைத் தொடங்கினார்கள். ஆழ்ந்த வைராக்யத்துடன் அவர்கள் கங்கைக் கரையில் அடர்ந்த காடுகளில் ஒதுங்கி வாழ்ந்தார்கள். மனதையும், புத்தியையும் பண்படுத்தி ஆய்ந்து அலசி பாகுபாடு செய்து மனமும் ஆன்மாவும் எப்படி, ஏன் இயங்குகின்றன என்று காண உள்ளே ஆழ்ந்தார்கள்.

நீண்டு தொடர்ந்து ஆன்மப் பயிற்சி நடத்தி அதன் பயனும் அடைந்த ஞானக்கனலகளை ஆசாரியர் கங்கைக் கரையைத் தேடி அடைந்த சிஷ்யனுக்குத் தந்தார். அவன் அவற்றைக் காப்பாற்றினான். வளர்த்தான். தன் அனுபவங்களின் பலத்தையும் தந்தான். ஒளியும் சூடும் மங்காமல் தன் சிஷ்யனுக்கு அந்தத் தீபத்தைத் தந்தார். அப்படி ஆசாரிய—சிஷ்ய பரம்பரையில் வந்தது இந்த ஆன்ம ஞானம். ஒவ்வொரு படியிலும் அது அவர்களுடைய தபோ பலத்தையும், அனுபவம் தந்த அதிகாரத்தையும் பெற்று எல்லா அமிசங்களிலும் வளர்ந்து வந்து இருக்கிறது. இநத ஞானசீலர்கள் உண்மையைத் தேடும் முயற்சியில் சுயநலமே மறந்து உழைத்தார்கள். உண்மையை அடைந்த புல்லரிக்கும் ஆனநதததில் தம்மையும் மறந்தார்கள். உபநிஷதங்களின ஆசிரியாகளை அறிய உபநிஷதங்களில் வழியில்லை. மிகச் சிறந்த தஙகள் ஆராய்சசி நூல்களில் கையெழுத்து இடக்கூட மறந்துவிட்டாாகள !

அவர்கள் கண்டுபிடித்த உண்மையை மதித்தார்கள். கண்டு பிடித்தவனைப் பெரிதாக எண்ணவில்லை. மனிதன் குமிழி போன்றவன். மனிதன் புகழும் பெயரும் உள்கனம் இல்லாத குழாய்கள் என்று அறிந்திருநதடியால் அவர்கள் வருங்கால சந்ததியின் ஞாபகததில் வாழ முயலாமல சூட்சுமமான சுத்த உணர்வுநிலையில் அமரராக வாழ ஏற்பாடு செயதுகொண்டார்கள்.

உண்மையை நாடி—ஒரே உண்மையைக் கண்டு உலகத்துக்குக் கூவி உரைக்கும் அந்த மகான்கள் தப்பான கூற்றுக்களைச் சொல்பவர்களல்ல. ஒருகால் இன்று உள்ள வேதாந்தி

சமூகத்தின் மனதுக்கு ஏற்படவோ, பணம் பெறவோ, பிரசுர கர்த்தரிடம் பெருமை பெறவோ, வாசகர்களிடம் நலல பெயர் எடுக்கவோ விரும்பி அப்படிச் செய்யலாம். ஆனுல் உபநிஷத தரிசிகளை உண்மை வழியிலிருநது அப்பால் இழுத்துச் செல்லும ஆற்றல்கொண்ட எந்த ஆசையும் கிடையாது. அரசாகளே அவர்களுக்குத் துச்சம். அரச சபையிலிருநது ஒதுங்கி உள்ள முழுமை, பக்தியின் பேருண்மை, தங்கள் அறிவின் ஆற்றல் இவைகளிலேயே திளைத்தனர்.

உண்மைப் பொருள் அறிந்த அவர்கள் சக்கரவர்த்தியிடம கூட அவன் வழிதெரியாது வருத்தமுற்று என்றென்றும் ஏழை யாகவும், சக்தியற்றும் விளங்கும் ஒரு புழுவுக்குச் சமானம் என்று சொல்லும் துணிவு கொண்டிருந்தனர்.

தவிரவும் அவர்கள் எல்லோரும் தனித்தனி முறையைட பின்பற்றிலுைம் முடிவில் சொலவது ஓரே உண்மையைததான் அப்படிப்பட்ட ஆற்றல், சீர்மை, முழுமை, உளநலத் துணிவு எல்லாம் பெற்ற அவர்களை, கதை கட்டும் பித்தர்கள் என்று நாம் எவ்வாறு துணிந்து கூறமுடியும்? எதறகாக அவர்கள் அவவிதம் செய்யவேண்டும்? உண்மையை அறியப் பசியும், தாகமும் கொண்டு கஷ்டப்பட்டுக கண்டுபிடித்த உணமையை அவர்கள நிர்ப்பந்தமாகப் பிரசாரமா செய்தார்கள்? மனப் பககுவம் கொண்டு, வேண்டும் என்று விழைந்தவனுக்குத்தானே சொன்னூர்கள்.

உபநிஷதங்கள் 'வெளித் தோற்றங்கள்'—தனி மனிதன் புத்தியின் விளைவுகள் அல்ல. வெகு நாளையப் பயிற்சியின பயனுய் மனதும், புத்தியும் சூக்ஷம நிலையின் மிக உயர்நத தளங் களில் சிறகடித்துப் பறக்க ஆரம்பிககினறன. அஙகே ஒரு தெய்வ அருளும் துலாநிலையும் பெற்று நிற்கின்றன. அங்கே அந்த ஒளி வெளியில் அவை அப்படியே ஒனறுமில்லாமல் ஆகிவிடு கின்றன. இதுவே யோகங்களின் முடிவு. அந்த நிலையில்—மனம் லயமாகி நிற்கும் நிலையில்-தானுகத் தோன்றுவதே உண்மையாம். ரிஷிகளும, முனிவர்களும் அதை அவ்விதமே பெறுகினறனர்.

உண்மை கற்பனேயோ அல்லது தர்க்கம் செய்தோ பெறப்படுவது அல்ல. ஆகவே கற்பனே என்று யாராவது புத்திச் சோம்பல் உள்ளவன் சொன்னுல் அவன் உளருகிருன் என்று தள்ளிவிட வேண்டியதுதான்.

இந்த உபநிஷதங்கள் மனித வாழ்க்கையின் வெண்ணெ யாம்! நான்கு வேதங்களில் ஒவ்வொன்றுடனும் மூன்ருவது புத்தகமாக இணேக்கப்பட்டிருக்கின்றன. மந்திரங்கள், .பிரா மணங்கள், அரண்யகங்கள் என்ற மூன்று பகுதிகள். ஒவ்வொரு வேதத்துக்கும் உள்ள மந்திரங்கள் ரகசிய சக்தி கொண்ட பொருள் பொதிந்த வாக்கியங்கள். பிராமணங்கள் இயற்கையின் பெருமை சீர்மை, அழகு இவற்றிற்குச் செலுத்தும் புகழ் பாடல் கள்; மேலும் யாக யக்ஞங்களின் விதி முறையின் விவரணங்கள் மூன்ருவது உபநிஷதங்களாம்.

அரண்யகம் என்ருலே காட்டிலே பழக்கும் பொருள் என்று பொருள் படுகிறது. ஸ்தூலப் பொருள்களிலிருந்து மனது— புத்தியை அகற்றி உலகை மறக்க அமைதி கொண்ட ஒரு சூழ்நிலே தேவை. ஆம். சிறு தொந்தரவு இருந்தாலே, உதாரணமாக வேலேயை விடுவோம் என்ற கேள்வி எழுந்தால் பதில் சிந்திக்க வீட்டைவிட்டுப் பாாக்குக்குச சென்று மரத்தடியில் படுத்து முன் னும் பின்னும் யோசிககிருேம். அந்த நிலேயில் உயிர் தத்துவக் கிணற்றின் ஆழத்துள் ஆழத்துக்கு, முழுகவேண்டும் என்ருல் சூழ் நிலேயின் தேவையைப் பற்றிப் பேசவா வேண்டும்?

வேதங்கள் குரு சிஷ்ய பரம்பரையில் சொல்லியும் கேட்டுமே நின்று பரவிவந்தன. ஆனுல் வியாச பகவான் காலத்தில் மனிதன் மன ஆற்றல் குறைந்து வருவதைக் கண்டார்கள். உலகாயதம் மனதில் பட்டுத்திரையிட ஆரம்பித்த காலம்போலும் அது. ஆகவே இந்த உண்மை சாஸ்திரங்கள் வகுத்துத் தொகுத்து வைக்கபபடாவிட்டால் மக்கள் இவைகளே இழந்தே விடுவர் என்று எண்ணினுர்கள். அந்தச் சமய 'வைதிகர்கள்' என்ன கூச்சல் போட்டிருப்பார்கள! துளஸிதாஸ் ராமா யணத்தை ஹிந்தியில் எழுதியபோதும், கீதையும், உபநிஷதங்

களும் ஆங்கிலத்தில் வெளி வந்தபோதும் அப்படித்தான் அலறி ஞர்கள். இன்னும் ஆங்கில மொழியில் சத்சங்கம் என்றலே தபபு என்று எண்ணுகின்றவர் உண்டு. அதனுல் என்ன? வெற்றுப் படிப்புப் பண்டிதர்கள் பேச்சு இது. இவர்களை விடப் பெரியவர்கள் உபநிஷத உண்மைப்படி வாழ்கின்றவர்கள். உலகத்தையும் அதன் சந்தை நிலையையும் விட்டுத் துறவும், அறிவும் கொண்டு வாழ்கின்றவர்கள். அந்த மகாத்மாக்கள், இந்தச் சாதுவின் குருமார்கள்—உண்மை அறிய ஆவல்கொண்ட படித்தவர்களிடையே இந்த ஆத்மா, வித்தையின மறுமலர்ச்சி மூலம் ஹிநதுமதம் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட வேண்டும், அது அவசியம் என்று கண்டார்கள். இன்று நாம் வேதவியாசரை ஹிந்து பண்பாடு, அதன் ஞானவிளக்கைக் காத்துத் தந்தவர் என்று போற்றுகிறேம் என்றல் சின்மயாவின் குருமார்களையும் நன்றிக் கண்ணீருடன் உலகம் மதிப்பறிநது போற்றும் நாள் மிகத் தொலைவிலில்லை. உலகம் அவர்கள் துணிவுகொண்ட இந்த மறு மலர்ச்சி இயக்கத்திஞல் நன்மை பெறுவது திண்ணம்.

நிற்க. வேதவியாசர் சிதறிக் கிடந்த மந்திரங்களை இருக்கு, சாமம், யஜுர், அதர்வண வேதம் என்று நான்காகத் தொகுத் துத் தந்தார். ஒவ்வொரு வேதமும் மந்திரங்கள, பிராமணங்கள், அரண்யகங்கள் என்று மூன்று பகுதிகள் கொண்டது என்று பார்த்தோம்.

தகுதி வாய்ந்த மாணவர்கள அரண்யகங்களைச் சிறப்பாகப் படிக்கக் கங்கைக் கரையில் அடர்ந்த காட்டுக்குள் ஒதுங்கிஞர்கள். ஏதோ உலகை விட்டே ஓடிஞர்கள் என்று முடிவு கட்டி நாம் சிரிக்கலாம். உண்மை அதல்ல. விட்டே ஓடுவது வேறு; ஒதுங்கு வது வேறு. அவர்கள் வாழ்க்கையைச் சமாளிப்பதற்குக் காட்டிய தில் பாதி அளவுகூட நம்பிக்கை, நேர்மை, தெளிவு நாம் காட்டு கிறதில்லை என்று சொல்லலாம். அன்றுபோல் இன்றும் அவர்கள் பயந்து ஓடிஞர்கள் என்று சொல்பவர் பல உண்டு. உண்மையில் ஆழ்ந்து சிநதிக்கிறவர்களுள இப்படி ஒதுஙகுபவாகள இன்றும் இருக்கிருாகள். புத்திக்கட்டைகளும், மாடுகளுமதான இப்படி ஒதுங்சத்தெரியாமல் இருக்கினறன. அவர்களுக்குத் திரவியம்

தேடப் போகும் ஆட்டம், செலவழித்தல், வியர்வை பெருக்குதல் அழுதல், உளைதல் முதலியவற்றின் ஒரே படியான தொகுதியே வாழ்க்கை என்று படுகிறது. நடுச் சந்தையில் நிற்பதுதான் அவர்கள் கருத்தில் வாழ்க்கையில் இருப்பது. ஒதுங்கிச் சிந்தித்து தனியே துறவுநிலையில் அமர்வது தியானசமாதி எல்லாம் பித்துக் கொள்ளியின் சொல்களாம். ஆனால் இன்றும் நம்மிடையே ரிஷிகள் இருக்கிறார்கள் என்று அவர்களுக்குத் தெரியாது. பேராசிரியர்கள், புதுக் கண்டுபிடிப்புக்களில் மனம் செலுத்தும் விஞ்ஞானிகள், கலைஞர்கள், ஏன் அரசியல்வாதிகள் எல்லோருமே என்ன செய்கிறார்கள். ஆழ்ந்த கருத்தில் ஒரு வகையில் பார்க்கப்போனால் இவர்கள் எல்லாரும் பயந்து 'ஓடுகிறவர்கள்' தாம். பேராசிரியர்கள் மறதி பிரசித்தி பெற்றது. கலைஞர்கள் பட்டினிகிடக்கிறார்கள்; அவமானம் தாங்குகிறார்கள். இருந்தும் அழகை அனுபவிக்கும் தங்கள் லட்சியத்தில் இடையறாது சென்று கொண்டிருக்கிறார்கள். நாம் அவாகளை லட்சியம் செய்வதில்லை. அவாகளும் நம்மைக் கவனிக்காமலேயே இருந்துவிடுகிறார்கள் என்றே தோன்றுகிறது.

கந்தல் கட்டிய ஒரு கிழவன குளக் கரையில் அமர்ந்து குளத்துக்குள் கல்லெறிநது அதனால் எழும் வட்ட அலைகளைப் பார்த்து ரசித்துககொண்டிருந்தான். இதைக்கண்ட குடிமகன் ஒருவன் இந்தச் சோம்பேறியைக் கண்டு மனம் கொதித்தான் 'முன்னேற்றத்தில் நாட்டம் கொண்ட அரசில் இவ்விதச் சோம்பேறிகளைப் பாாத்தவுடனேயே சுட்டுத் தள்ளிவிட வேண்டும; அவர்கள் நாட்டுக்குச் சுமை' என்றான். அவன் சொன்ன முடிவை ஒத்தே இன்று அநேக படித்தவர்கள் சிந்திக்காமல் அவசரமாகப பேசிவிடுகிறாாகள். ஆனால் ஒரு விஷயம். கல்லெறிந்தவனும், அவனைத் திட்டியவனும் காலக்கிரமத்தில் இறநதுவிட்டனர். திட்டியவனை நாடு இறந்த நாயைப்போல் மறந்துவிட்டது. ஆனால் மற்றவனை இன்று நாடு போற்றிப் புகழ்கிறது. அவன் ரபேல் என்ற கலைஞன். அலைகளுக்குத் திரையில் வண்ண ஒளி தந்து அழியாதவனாக்கித் தநது சென்றான்.

சுருக்கமாக நல்ல எந்தப் புது விளைவும் அவசரம், ஆத்திரம், படபடப்பு, வெளிவியர்வை இவற்றிலிருந்து எழமுடியாது. சூட்சுமமான உள் உழைபபின் விளைவே அது. இநத இயநதிர உலகத்திலும் பாாக்கிறோம். மிக வேகமாகச் சுழல்கிற சக்கரம 'சும்மா இருப்பதாக'த் தோன்றுகிறது. அதன்மேல் வைத்த பம்பரம் அசையாத படம்போல் தோன்றுகிறது. சக்கரம் வேகம் குறைந்தால்தான் அந்தப் பம்பரம ஆடி, அசைந்து அக்கம் பக்கம் நகர்ந்து உருளுகிறது. அவ்விததே மனிதன் சிந்தனை உலகத்தில் ஆழ்ந்து வாழும்போது வெளிச் செயல்கள் அடங்கி நிற்கின்றன. அப்படிப்பட்டவர்கள் சோதனைச சாலை, ஸ்டுடியோ, வீட்டு மாடி எங்கிருந்தாலும் சரி, இந்த உலகத்திலிருந்து ஒதுங்கித்தான் நிற்கிறார்கள். அவர்கள் தெரு மக்களுடன் சேர்ந்து சிரித்து ஆட மாட்டாதவாகள். அவர்கள் சில சிறந்த குறிக்கோள்களுக்காக வாழ்கின்றவர்கள். அவர்களை 'பயநது ஓடியவாகள்' என்று எண்ணுவது நம்முடைய மதியீனமாகும். அர்த்தமற்ற பேச்சாகும்.

அவ்விதமே சிலர், உண்டு, உடுத்து, உறங்கி வமிச விருத்தியில் புரள்வதைவிட வாழ்க்கையில் சிறந்த சூட்சுமமான குறிக்கோள் இருத்தல்வேண்டுமே என்று தேட விரும்பினர். ஆழ்ந்த சிந்தனைக்கு இன்றியமையாததாக வெளியே சாந்த சூழ்நிலை, உள்ளே ஒரு தெய்வ அமைதி இவற்றின தேவை அமைந்தது. கடந்த காலத்தில் கங்கைக் கரையை அடைந்து, பல்லாண்டுகள் ஆத்ம ஆய்வு, ஆத்ம ஆராயச்சி, ஆத்ம சோதனையில் ஈடுபட்ட பெரியோர்களே ஆத்ம வளர்ச்சியின் முழுமைக்கு வழி வெட்டிப் போட்டார்கள். சிஷ்யர்களுக்குச் சொல்லுவதன்மூலம் அடுத்த பரம்பரைக்கு அந்த உண்மைகளைத் தந்தார்கள். அவர்கள்—சிஷ்யர்கள்—தாங்களும் நடந்து அறியாத துறையில் பல மைல்கள் பாதையை முன்னேற்றினார்கள். அவர்கள் தங்கள் சிஷ்யாகளை அந்த வழியில் விட்டுத் தாங்கள் மறைந்தார்கள்.

உபநிஷதங்கள் சிந்தனையாளர்களின் பல பரம்பரையினா சேர்ந்து வகுத்த 'உள் வழியாம்'. அவர்கள் தாஙகள் கண்ட கொள்கைப்படி வழி நடந்த பெரியார்கள், மனித ஆத்மாவின்

நித்ய சத்வ நிலையைப்பற்றி அவர்கள கண்ட உண்மைகள் அளவுக்குட்பட்ட சொற்களில அடங்க மறுத்தன. ஆகவே அவர்களுக்குச சமஸ்கிருதம் எனற பணபட்ட மொழியைத் தயார் செய்ய வேண்டியிருநதது.

உபநிஷத மந்திரங்கள் தங்கள் பொருள்களை 'சுட்டு', குறிப்பு இவற்றின் மூலம் காட்டுகின்றன. நேரடியாகப் பேசுவ தில்லை. ஆனால் அந்தச் சுட்டுகள், குறிப்புகள், உள்கிடக்கைகள் எல்லாம் நம்மை 'உண்மை'யின் சந்நிதிக்கு அழைத்துச் சென்று விடுகின்றன. ஆனால் குறிப்புகளும், உள்ளர்த்தங் களும், புதை பொருள்களும் புரிய ஒரு குருவின் உதவி வேண் டும். உபநிஷத மந்திரங்களை நாணமும் தலைகுனிவும், ரகசியப் பார்வையும் கொண்டவர்களாகிய நாமே வாசித்துப் புரிந்து கொண்டு விடமுடியாது.

ஆம், குருவின் உதவிமட்டும் போதாது. நமக்கும் தெரிந்து கொள்ள வேணடும் என்ற தாகம் வேண்டும். நம் உள்ளே உள்ள சூட்சும ஆற்றல்கள் எவை என்று சிந்திக்கும் ஒரு தனி உள் ஆற்றலும் வேணடும். இந்த ஆற்றல் நல்வாழ்வு வாழ்ந் தால்தான் கிடைக்கும். பிரம்மச்சரிய விரதத்தை மிகவும் கவன மாகக் காக்கவேண்டும்.

நலலவராக இருங்கள், நன்மை செய்யுங்கள், தினம் அரை மணியாவது தியானம் செய்யுங்கள். பிரம்மச்சரிய விரதத்தைக் காப்பாற்றுங்கள். உபநிஷத மநதிரங்களின் விளக்கங்களை நன்கு புரிந்துகொண்டு அவற்றுள் ஒன்றுங்கள். எம்பெருமான் கிருபையால் ஒரு கணமாவது அந்த உபநிஷத உண்மையின் புல்லரிப்பு நிலையின் இனபத்தை அடைவீர்கள்.

ஓம் தத்சத்

# நடைமுறை

இதுவரை வேத இலக்கியததில் உபநிஷதங்கள் பெற்றுள்ள இடம, அவை காட்டும் முடிவு, அந்த முடிவை அடைய அவை சொல்லும் வழி இவை எல்லாம் பார்த்தோம். இப்பொழுது அவை ஏற்றுக்கொண்டுள்ள பாட முறையை அல்லது நடையைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

ரிஷிகள் சொல்லுக்குள் அடங்காத ஒரு உண்மையைச் சொல்லச் செய்த முயற்சிகளே உபநிஷதங்கள். அவர்கள் அதற்கு ஏற்றதாகச் சுத்தமான உள் பலம பொருந்திப் பதப்படுத்தப்பட்ட ஒரு மொழியாகச் சமஸ்கிருதத்தைக் கண்டார்கள். இநத மொழிக்கு எல்லையற்ற பொருளும, கருத்தும் உண்டு. அபபடியிருந்தும்கூட அதுவும் சில சமயம் சொறகள மூலம மட்டும் அந்தப் பரம ஞானத்தைப பற்றிப பேச முடிகிறதில்லை. மற்ற மொழிகளைவிட இந்த மொழி அதிகம் வெறறி பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் அதன் சொற்கள் கொண்டுள்ள சுட்டும் சக்தியே!

படிக்கும் பொருளுக் கேற்றவாறு படிக்கும் முறையும் மாறும். நாவல் படிக்கும் முறை வேறு. பௌதீக விஞ்ஞானத்தைப் படிக்கச் சில ஆற்றல்கள் வேண்டும். புததி, தர்க்க ஆற்றல் இவை எல்லாம் தன்மை. உபநிஷதம் படிக்க உள்ளும், வெளியேயும் சில தனி அமைப்புக்கள் தேவை. அது ஏன, எப்படி என்று வேதாநத நூலகள் பின்வரும் முறையில் விளக்குகின்றன.

உங்களில் சிலரும் இந்தச் சாதுவும் சோநது சுகலபக்ஷத்தின் துவிதியை இரவில் வெளியே போவதாக வைத்துக் கொள்வோம். மேகமற்ற ஆகாயத்தில் சின்மயா இரண்டாம் பிறைச் சந்திரனைப் பார்த்துவிடுகிறார். அதன் அழகு தூண்ட அவர் மற்றவரிடம் சொல்கிறார்: "அதோ பாருங்கள் அன்பர்களே,

என்ன காட்சி!'' விரலையும் சுட்டுகிறார். அன்பர்கள் பார்க்க இயலவில்லை. ஆனால் பார்க்க ஆவல் மட்டும் பொங்குகிறது. சின்மயாவும காட்டிவிட வேண்டும் என்று துடிக்கிறார். ஆகாயமோ ஒரே அகண்டாகாரமாக இருக்கிறது. வேறு ஏதாவது பொருள்கள் இருந்தால் அல்லவா இதற்கடுத்து அதற்கு இப்பால் என்றெல்லாம் சொல்ல முடியும்! ஆகவே வேறு வழியின்றி அடுதத வீட்டிலுள்ள மரத்தை ஆதாரமாகக்கொண்டு அதைக் காட்ட ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே அவர் பின் வருமாறு தொடங்குகிறார். "அன்பர்களே, அதோ பாருங்கள். மாமரம் பார்த்தீர்களா? அதன் கிளை ஒன்று வடக்கே போகிறது. பாருங்கள் அதை! அதோ அதன் நுனியில் இரண்டு இலைகள்—ஆம் அசைகின்றனவோ அவைதான்!'' என்றெல்லாம் பேசுகிறார். யோசியுங்கள். நண்பர்களுக்கு சுவாமியிடம் நம்பிக்கை வேண்டும். இல்லை என்றால் 'ஆகாயத்தில் பிறையைக் காட்ட வேண்டிய இவர் மாமரத்தின் வேரிலிருந்து ஆரம்பிக்கிறாரே! ஹம்பக்!' என்று எண்ணிவிட்டால்? சின்மயா பிறையின் அழகைக் காட்டும் முயற்சியை நிறுத்திவிட வேண்டியதுதான். ஆனால் அவர்களுக்கு ஆழ்ந்த நம்பிகைக இருந்தால் அவர்கள் படிபபடியாக சுவாமி சொல்கிறதைப் படிப்படியாய் நிறைவேற்றுவாாகள். அவர்கள ஒததுழைத்தால் பிறைச சந்திரனைக் காட்டுவது எளிதாக முடியும்.

பிரும்ம வித்தையைப் போதிக்கும ஆசாரியர்களும், இப்படித்தான் மிகவும் விரிவாக மரம், கிளை கடைசியில் இலைகளைப் பற்றிச் பேசுகிறார்கள். அங்கிருந்து அவர்கள், "அதோ பார். ஆத்மாவைப் பார். அதோ இருக்கிறது உண்மை!'' என்று காட்டுகிறார்கள். நாம் சிருஷ்டி முறைகள், ஜீவனின் சரீரம், பிராணன்கள், மனது, புத்தி, ஆனந்த மயகோசம் எல்லாவற்றையும் பற்றி விரிவாகப் பேசியிருக்கிறோம். நம் கூற்றுகளில் ஒன்றுக்கொன்று முரணியவையும் இருந்திருக்கின்றன. இவை எல்லாம் சில உண்மையைப்பற்றிய அமுததமானவை, சில உண்மையற்றவைபறறிய அல்ல என்ற பேச்சுகள். இவை எல்லாமே ஆரம்ப பாடங்கள ; உண்மை விளகக முதல் படிகள்.

இவை எல்லாவற்றையும் நன்கு உணர்ந்த சாதகன் சீக்கிரமே தன்னுள் உள்ள மெய்ம்மையே தன் ஆத்மன் என்று உணர்ந் திருப்பான். உண்மையை அவன் உணர்வதற்கு முன்னமேயே உண்மை அவன் எதிரே நின்று விடுகிறது. நாம் முன்பு காட்டிய உதாரணத்தில்கூட அவன் சரியானபடி இலைகள் மேலே கண் களைத் திருப்பி விட்டிருந்தானுனல் சந்திரன் பிறை அவன் கண்களில் பட்டுக் கொண்டிருக்கும். அவன் அதை உணரச் சற்று நேரம் பிடித்திருக்கலாம்.

இலைகளைக் காட்டும் வரை பார்த்தான். பார்க்க விரும்பிய வனுக்குப் பாடம் சொல்லலாம். அதற்குப் பிறகு, "மேலே அதே கோட்டில் நேரே பார்!" என்று சொல்லிவிட்டு ஒதுங்கிவிட வேண்டியதுதான். பிறகு பார்க்கிறவன தன் பார்வையை இலையிலிருந்து அகற்றி அதற்குமேலே தொலைவில் பார்க்க ஆரம் பிக்க வேண்டியதுதான். ஆம். அது அவன் முயற்சியினுல் என்று கூடச் சொல்லக்கூடாது. பார்வை சரியான கோட்டில் திருபபப் பட்டால் உடனே தடுத்தாலும் தடுக்க இயலாமல் நேராக அந்தப் பிறை காணபபட்டு விடும. பிறகு அவன் ஒரே பார்வையில் இலை, பிறை இரண்டையும் காணமுடியும். பக்தன் வழிபடும் பொருளில் அந்த மெய்மைப பொருளைப் பார்ககிறுன. அந்தப பொருளைப் பார்த்தவுடனேயே அவன தன்னை மறநது உள வளாசசி அடைகிறுன. பரமாத்மாவுக்கு நேரிலேயே இருப்பதாக உணாகிறுன.

பக்தி பின்னுல் வளர்ந்ததாகக் காணப்படுகிறது. அது புராணங்கள் தந்த செல்வம். வேத காலத்தில் மனிதர்கள் அமைதியுடன், பரபரபபு அடையாதவர்களாய் ஆழ்ந்து இருக்க முடிநதது. அப்பொழுது உபாசனை முறைகள் சரியாக இருந்தன.

அடிப்படையில் பக்தி மார்ககமும் உபாசனை முறைகளும் ஒரு தரப் பட்டவையே. உபாசனையிலும் உபாசகன் தன் சூழ்நிலையி லிருநது தப்பி ஒதுங்கி ஒருமுறை உலகின பரப்பிலும் உண்மையி லும் சென்று நிற்கிறுன். வேதங்களின் கருமகாண்டங்களில் அநேக வகை உபாசனைகள் சொல்லப்படுகின்றன. அவைகளுள்

ஒன்று பிராண உபாசனையாம். இதில் உபாசகன் தன் பிராணனை உயிருள்ள ஜீவன்களுககெல்லாம உயிராக உபாசனை செய்கிறான். அவன் மனது இநத விதம் நான தனி என்று பிரிக்கும் இரும்புப் பிடியிலிருந்து தளர்ந்து பாயப பயிறறுவிககபபடுகிறது.

கர்மங்களே (சடஙகுகளே) ஆன்மப் பயிற்சிக்கு உதவிகள் தாம். மாயையில இருக்கும்வரை மனிதன் ஆசைகள கொண்டு தான வாழமுடியும். வேத ரிஷிகள் இதை உணர்ந்து அவன் ஆசைகள் தீர எனவே யாகயக்ஞங்களை வகுத்தார்கள். வேதங் கள், கர்மங்கள் ஆசையுடன செய்யபபட்டால பித்ருலோகத்தில் ஆனந்தம கிடைககும் என்றும உபாசனையுடன் கர்மங்கள் செய்தால் தேவலோகத்தின் பிரம்மானந்தஙகள் கிட்டும் என்றும் உ ஆனால் கர்மகாண்டம முடிவடையக்கூடிய பித்ரு, தேவலோக இனபங்களைப்பற்றி மட்டும் புண்ணியங்கள் தீர்ந்தவுடன் அறிவின் அநதத் தளங்களிலிருந்து கீழே துன்பஙகளுக்கும, குறைகளுக்கும இருப்பிடமான பூலோகத் துக்கு இறஙகிவிட வேண்டியதுதான. இப்படி முடிவில்லாமல் இஙகும் அங்கும் அலைந்த பிறகு, ஜீவர்களுககு ஒரு மாதிரிச் சற்றுத் துறவு மனப்பான்மை வருகிறது. அவர்கள் வளர்ச்சி அடைகிறார்கள். அவர்கள் வேறு ஆசையின்றி ஈசுவரனிடம் மட்டும் பற்று வைத்து, கர்ம உபாசனைகளைத் தொடரவேண்டும் என்று சொல்லப்படுகிறது. அப்பொழுது அந்த ஜீவன் மனம், புத்தி சுத்தம் பெற்றவனாகி சத்சித் ஆனந்தத்தின் சுத்த சக்தியை அறிந்து அதனுடன் ஒன்றவேண்டும் என்ற ஆவல் பெற்று அதற் காக முயலவும் ஆரம்பிக்கிறான். அப்படியே இலையிலிருந்து பிறைக்கு என்கிற வழியில், உபநிஷத ரிஷிகளும் நமமைப படிப் படியாக உயிரின் மையமான அறிவெல்லாவற்றிற்கும் சுனை யான ஆத்மாவரை படிப்படியாகக் காட்டித் தருகிறார்கள். அவற்றை நாம் உணாந்து கடைசியில் விளககஙகள சேதிகளுக் கப்பால் ‘ நெடும் பார்வை ’ செலுத்தத் தயாராக வேண்டும்.



# உபாசனையும் பக்தியும்

சாமவேதத்தின் தளவகார சாகையின் ஒன்பதாம் அத்தியாயம் கேனோபநிஷத். இந்த வேதமும் மந்திரம், பிராமணம், அரண்யகம் என்ற மூன்று பகுதிகள் கொண்டதே. கேனோபநிஷத் மூன்றும் பகுதியிலுள்ளது. இதற்குமுன் உள்ள எட்டு அத்தியாயங்கள் கிரியைகள் மதச்சடங்குகள் இவற்றைப்பற்றிய கர்ம, உபாசனை முறைகளைப்பற்றிப பேசுகின்றன. 'காமங்கள' சில யாகம், யக்ஞங்களைப்பறறியும் உளளடக்கியுள்ளன. உபாசனை என்பது தியான சாதனையின ஆரம்பப் பயிற்சியாம்.

இந்த நாளில் உபாசனைக்காகக் கடவுளை ஒரு மூர்த்தி, ஒரு அடையாளம அல்லது ஒரு படத்தில பிரதிஷ்டை செயகிறோம். சில பொருள்களும அவவாறே ஏற்றுக கொள்ளப்படுகினறன. உதாரணமாக சிவலிஙகததில சிவதரிசனம் காணகினறோம். சாளக்ராமத்தில் (ஒருவகைக் கல்) ஸ்ரீமன் நாராயணனைக் காணுகிறோம். போதி (அரசமரததில்) புத்தபகவான், சிலுவையில் ஏசுகிறிஸ்து, நெருபபில் ஜொராஷ்டா (பாரசிகளின தெய்வம்) இப்படியாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இவற்றையெல்லாம் வழிபடுகிறவர்கள் இவற்றில் அந்தப் பொருளைக் காண்பதில்லை. தங்கள் தெய்வஙகளைத்தான் பாரக்கின்றார்கள.

படித்து நமபிக்கையிழந்த நவீன மனிதனுக்காக ஒரு உதாரணம் சொல்ல விரும்புகிறார் இந்தச் சாது. ஒரே பெண்ணைத் தாயாராய்ப் பாரக்கிறது அவள் பெற்ற குழநதை; பெண்ணைகப் பார்ககிறாள் தாய்; சகோதரியாகப பார்க்கிறான் உடன் பிறந்தவன்; மனைவியாகப் பார்க்கிறான் கட்டியவன. குழந்தை மரியாதையாகப் பார்க்கிறது; கணவன் காமவெறி கொண்டு பார்க்கிறான்; தாய் அனபு கொண்டு பாாககிறாள. நால்வரும ஒரே பெண்ணை நான்கு வகையில பார்ககிறாகள். இது தினம்

நடக்கிறது, சாத்தியம் ஆகிறது எனின், பக்தன் தன் இஷ்ட தெய்வத்தை வழிபடு பொருளில் பார்ப்பது பித்துக்குளியின் செயலாகுமா? அப்படி என்ருல் இனறு உயிருடன் இருக்கும் மனிதர்கள எல்லோரையுமே முழுவதும் பித்துப் பிடித்தவர்கள் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். அப்படிச் சொன்ஞல் மூர்த்தி பூஜையை வெறுக்கிறவாகளகூட ஒப்புககொளள மாட்டார்களே !

ஆத்ம சக்தியில் முன்னேறுகிற ஒருவன் படிப்படியாக இநதப் புலன்கள் நாடும் புற உலகவாழ்வு வெற்றுக்குழாய் போன்றது என்று புரிந்து கொள்கிருன். சுவர்க்கம் தரும் இன்பமும் துன்பம் கலவாததல்ல எனறு உணர்கிருன். இன்பம் ஆனந்தம் இவற்றுடன் எல்லாம் முடிவு என்ற புழுவும் சோந்தே இருக்கிறது. அவற்றின வேரைக கத்தரித்துக் கொண்டு கஸ்தூரி மான் கஸ்தூரியைக் காட்டில் தேடி அலேநது களேத்தது போல மனிதன் ‘திராத இனப வெள்ளத்தை’ வெளியே தேட முடியாது. மனிதன, தேடுகிருன் குவிக்கிருன். மீண்டும் ஆவல் கொணடு உழல்கிருன, களேக்கிருன் — அந்தக் கஸதூரி மானேப்போல ! கடைசியில சாகிருன், அதிருப்தியுடன் களேப் பின் பலஞகவே !

தன் நிழலேப் பிடிக்க விருமபும் குழந்தை தவிக்கிறது; தாண்டுகிறது; திண்ணேயிலிருந்து வீழ்நது கத்துகிறது. அப்படியே மனிதனும், முடிவுறும் பொருளகளில முடிவிலலாத இனபத்தைத் தேடி சவக் குழியில் விழுகிருன் !

மான் தன்னுள கஸ்தூரி இருப்பதை அறிநதால வெளியே ஓடிக் களேக்காது. அதேபோல் மனிதன ஆனந்தச் சுனே தன் னுளளே இருபபதை உணாந்தால சந்தைக் கடையின் சந்தி மண்ணில அதைத் தேடுவதை நிறுத்திவிடுவான். அவனுககு வாழ்வு என்பது பார்த்து அனுபவிககும ஒரு இனப நாடகம் ஆகிவிடும. தானே பங்கு எடுத்துப் பதைக்கும் ஒரு துனபியல் செயகை ஆகாது.

சில வருஷங்களேனும் ஒருவன் பற்றற்று, சுயநலம் நீங்கி, காம உபாசனையில ஈடுபட்டிருநதால் அவனுககுப புனிதத் தன்மையும சூட்சுமத் தன்மையும் கிட்டிவிடுகிறது. அபபொழுது அவன் புலனின்பங்களையும, ஆவலகளையும முட்டாளதனம என்று கண்டு ஒதுக்குகிறுன். இனி அவன் கஸ்தூரி மானுகவோ, நிழல பிடிக்கும் நீள் பேதைக குழந்தையாகவோ இருகக மறுத்து விடுகிறுன். வெளியே அல்ல, உள்ளே உண்டு சுகம் என்று தெரிந்துகொண்டு விடுகிறுன்.

இந்த உண்மையை உணர்ந்த சாதகன் வேதாந்தம் படிக்கத் தக்க மாணவனுக ஆகிறுன். அவனுக்குக கர்மம, உபாசனைகள் தரும் மிகச் சிறந்த பயன் எனன என்று தெரியும். கர்மங்களைச் செய்வதிலும், உபாசனையைத் தொடர்வதிலும சுத்த பக்தி வேண்டும். அப்பொழுதுதான வாழ்க்கைச சுழலிலிருநது உடனே விடுபடும் எண்ணம், துறவு, விவேகம் என்கிற சிறந்த பொக்கிஷங்கள் கிடைக்கும் என்று அறிவான்.



# 2. கேனோபநிடதம்

## முகவுரை:

## குருவும், சிஷ்யனும்

இந்த உபநிஷதம் பூராவும் சம்வாத (கேள்வி — பதில் பேச்சு) நடையில் அமைந்திருக்கிறது. சிஷ்யன் உலகில் வாழ்ந்தவன். பொறியின்பங்கள் துய்த்தவன். இந்த முடிவடையும் இன்பங்களில் அலுப்புத் தட்டி, உலகம் வீண பூசலுக்கிடம், அன்றுட வாழ்வு நிழலைப் பிடிகக்கும் முயற்சி என்று அறிந்து ஒதுக்கியவன். புலன் நாடும் புறப்பொருள்களை ஆதாரமாகக்கொண்ட வாழ்வை ஒதுக்கியும் அதற்குள அதன் ஊடே தெரியாமல், பார்க்க முடியாமல் பெருமைப் பொன்னெளி திகழ்வதைக் காண்கிருன். பொய்யாம் புறப்பொருளை ஒதுக்கி 'தன்னையே' கொள்ள ஆரம்பிக்கிறன். அப்பொழுது புறஉலகம், அதன் பொருள்கள், மனிதர்கள் இவற்றுடன் பழகி, நிலை, சந்தர்ப்பம், நேரம், காலம் இவற்றுக்குத் தக்கவாறு அனுபவங்களை ஏற்படுத்தும் இந்திரியங்களைப்பற்றி அறிகிருன்.

அதே போக்கில் அவன் 'மனம்' என்றென்று இருப்பதை அறிய நேரிடுகிறது. ஏனெனில் மனம் இல்லை என்ருல் புலன்கள் பொருள்களை நாடப்போகிறதில்லை. அனுபவங்கள் ஏற்படப்போவதுமிலலை. பிறகு இவைகளுக்குப் பின்னல் மற்றும் ஒரு ஆற்றல் தத்துவம் இருப்பதையும் உணர்கிருன். அதை அவன் தானே உணர்ந்த போதிலும் அவனுடன் வாழும் மற்றவர்களிடையே இந்த உணாவு வெளிபபடுகிறதில்லை. அதனுல் அவன் குழபபமடைகிருன்.

இந்தப் பெரும் புதிரை, குழப்பத்தை, தீரத்துக்கொள்ளத் தான் சிஷ்யன் குருவை அடைகிருன். மனதைத் தன் விருப்பத்தால் பொருள்கள்மீது செல்லச் செய்யும் ஒரு சூத்திரதாரர்

உண்டா என்று கேட்கிருன். அப்படி ஒளியும் தந்து ஆட்டவும் ஆட்டும் ஒருவன் உண்டென்ருல் அது யார்? ரகசியமாய் என்னுள்ளேயே அமர்ந்து எப்பொழுதும் விழித்திருந்து இயக்கு விக்கும் அதற்கும் எனக்கும் என்ன உறவு? இனி உபநிஷதங்கள் தாம் அந்தத் தெய்வ ஒளியை நித்ய ஞானமான ஆத்மனைக் காட்டித் தரும் வேலையைச் செய்யவேண்டும். 'தான்' என்று தன்னுடன் ஒட்டியிருப்பதால் நாம் இதை அறிந்து கொள்ளுவதில்லை. ஈசுவரனிடம் சரண் அடைந்து அகங்காரம் அகற்றினுல் அதை அறியலாம். விடாமல் ஈசுவர ஸ்மரணை, ஜபம், கீர்த்தனை, சிரவணம், மனனம், தியானம் முதலியவை செய்து ஈசுவரன் அருளால் அதைப்பெற முடியும்.

தப்பான அகங்காரத்தை ஒழித்து உண்மையான 'நான்' என்ற அந்தப் பெரும் பதவியை—சிவோஹம் என்ற நிலையை அடையவேண்டும். வேதாந்தம் அது முடியும் என்று உறுதி தருகிறது.

கேனுேபநிஷதம் பிரும்ம வித்தையில் குருவினுடைய முக்கியத்தை வலியுறுத்துகிறது. அவருக்கு என்ன பெரும் தகுதிகள் உண்டு என்று நாம் முன்னமேயே பார்த்தோம். சாஸ்திரங்கள் நன்ருய் அறிந்து அந்த உண்மைத் தத்துவத்தையும், உணர்ந்தவரே நல்ல குருவாகும். கேனுேபநிஷத்தை வாசிக்க ஆரம்பித்தவுடனேயே நம் மனக் கண்முன் ஒரு ஆசிரமம் தென்படுகிறது. அதிலே தன் எளிய ஆசனத்தில் தெய்வ அமைதி ஒளிகொண்டு தன் ஆன்ம ஞானத்தால் பெறப்பட்ட உண்மை வாழ்வின் ஆனந்த உருவாய் ஒரு குரு அமர்ந்திருக்கிருர். அவரைத் தேக நலம் கொண்டு, சாதாரண உடை அணிந்து கையில் கட்டப்பட்ட விறகுடனும், மனதில் அறியவேண்டும் என்ற அடங்காத ஆவலுடனும் ஒரு சிறுவன் அணுகுகிருன். அமர ஆத்மாவாக மாற அவனுக்குள்ள ஆர்வம்தான் என்னே!

இந்த உபநிஷதம் அந்த உண்மையின் தன்மை, அதை அடையும் வழி இவற்றைப்பற்றிய தெய்வீக ஆர்வம் காட்டும் கேள்விகளுடன் தொடங்குகிறது. குரு அசங்காது துலாநிலையில் உள்ள மனதின் பரபரப்பற்ற நிலையில் ஆழ்கடல்போல் இருக்கி

ளூர். அன்பும் அருளும் ததும்புகிறது. ஆழத்திலிருந்து அன்பின் அருளை ஒரு குளிர்ந்த பார்வைமூலம் அவர் அந்தப் பையன் மேல் பொழிகிறூர். அது நேரே அவன் இதயத்தில் சென்று அலர்கிறது.

குரு சாஸ்திரம் படிக்காமல் இருந்து ஆத்மஞானமும், வாழ்வும் மட்டும் பெற்று இருந்தால் அவனுள்ளே என்றும் ஒளிதந்து நிற்கும் ஆத்ம ஒளியின்பால் சிஷ்யனுடைய அறிவைத் திருப்ப முடியாது. அவர் ஆத்மபோதம் பெருமல் சாஸ்திரங்கள் படித்து மட்டும் இருப்பாராகில் அந்த நிலையிலும் அவர் அவனுக்கு நித்திய ஞானத்தை நல்க முடியாது.

சுரோத்ரீயர்களாக மட்டும் இருந்து பிரும்ம நிஷ்டர்களாக இல்லாதவர்களுக்குக் காசியிலுள்ள பண்டிதர்கள் நல்ல எடுத்துக் காட்டு ஆவார்கள். ஒருமுறை இந்தச் சாதுவே (சின்மயா) காசியில் ஒரு பண்டிதரிடம் ஒருநாள் பாடத்தின் முடிவில், "ஐயா, மனம் தரும் மாயை அழிந்தால் உண்மை ஒளி தரும் என்று சாஸ்திரங்கள் வலியுறுத்துகின்றனவே, தியானத்தின்மூலம் ஒருவன் மனதை அடக்குவது சாத்தியமா?" என்று கேட்டார். அதற்குக் கிடைத்த பதில் மிகவும் நேர்மையானதுதான். ஆனல் ஒளிவு மறைவு இல்லாத அலட்சியம் கொண்டதாகும். அவர் சொன்னூர்! "இதோபார். உபநிஷதம் சொல்லும் வாழ்வை நீ பெற விரும்பினுல் காசியை விட்டுவிட்டு ஹிமயமலைக்குச் செல். வேறு ஒரு குருவைப் பிடி. நாங்கள் சாஸ்திரப் பிரமாணத்தை நம்புகிறவர்கள். மனதை அடக்கி ஒரு நிமிஷமாகிலும் அந்த அமைதியை அடைய முயற்சி செய்தவர்களில்லை. உனக்கு என்ன பதில் சொல்ல முடியும்?"

இதே கேள்வி வேறு விதத்தில் பல நேரங்களில் ஹிமய மலையிலுள்ள பல சாதுக்களிடம் கேட்கப்பட்டபோது அவர்கள் எல்லோரும், "ஆம். அது உண்மை, சாத்தியமே!" என்று உளம் பொங்கித் தெரிவித்தனர். அவர்கள் சொன்னதும் உண்மை. அதனுல் நாம் நம்பாமல் இருக்கமுடியாது.

நாம் முன் சொன்னதற்கு எதிரிடையும் உண்மைதான். ஹிமயமலையில் சில மகான்கள் இருக்கிறூர்கள், பூரண ஞானம்

பெற்று அதற்காகப் பூஜிக்கத் தக்கவர்கள் ; தெய்வ ஒளி காரண மாகப் பலர் அவரிடம் பணிந்து சேவை செய்கிறார்கள். ஆனால் அவர்களும் குரு ஸ்தானம் வகிக்கத் தகுதி அற்றவர்கள். ஏனெனில் தான்பெற்ற சுய அனுபவத்தை எடுத்து உரைக்க வகை தெரியாதவர்கள். அவர்கள் பேசுகிறதில்லை; பேசினாலும் வார்த்தைகள் தொடர்ந்து பொருள் பெற்று வருவதில்லை. அப் படிப்பட்ட ஆசிரிய மஹான்களின் சந்நிதிப் பெருமை, அவர்கள் செய்கைகளின் பாடம் இவைதான் நமக்கு வழிகாட்ட வேண்டும். ஆகவே ச்ரோத்ரீயர்களான பிரும்ம நிஷ்டர்களே தக்க குருக்களாக அமைய முடியும். அப்படிப்பட்ட ஒரு குருவைத் தான் சிஷ்யன் அடைகிறான். பக்தி, ஆவல் கொண்டு தியாகம் செய்யத் துணிந்து சேவைமூலம் தன்னைச் சுத்தி செய்து உண்மை அறிவைப் பெறத் தயாராகிறான்.

கேனோபநிஷத்தின் முதல் மந்திரம் சிஷ்யன் தகுதியையும் குறித்துக் காட்டுகிறது. அவன் கேட்கும் கேள்வியே—அவன் உள்ளே வளர்ந்து நிற்கும் மன, ஆன்மீக மனிதனின் தன்மையை நன்றாகக் காட்டித் தருகிறது. அவன் வாழ்வைக் கெட்டிக்காரத் தனமாய்ச் சமாளித்தவன். புத்தித் திறமையுடன் வாழ்ந்தவன் ; பொறிகள் துய்க்கும் வாழ்வு வெற்று வாழ்வு என்று சிந்தித்து அறிந்தவன். ஸ்திரமான வாழ்வின் ஆதாரம் தேடி அதன் பய னால் உலகப் பற்றுகளைத் துறந்து சிறந்த லட்சியத்துக்காகத் தன்னுள் ஆழ்ந்தவன்.

சாதாரணமான விநோதப் பித்தர்கள்தான் சந்நியாசத்துக்கும் ஆன்ம வாழ்வுக்கும் உரியவர்கள் என்று ஒரு அசட்டு நம்பிக்கை இருக்கிறது. இது நம்மிடையே பரவி நிற்கும் சுத்த அறியாமை யையே குறிக்கிறது. உண்மையில் கேனோபநிஷத்தில் உள்ள மாணவன் அல்லது கடோபநிஷத்தின் நசிகேதன் போன்று நன்கு உள்ள வளர்சசி கொண்டவனே சந்நியாசத்துக்கு ஏற்றவன். உண்மையைத் தேடும் இந்த வீர முயற்சியில் அவர்கள்தான் வெற்றியை அடையமுடியும். மலையேறிப் பழக்கமுடையவனே எவரெஸ்ட் சிகரத்தில் ஏறும் முயற்சியில் ஈடுபடத்தக்கவன். துணிவு, அடக்கமுடியாத தைரியம், துணிகரக் காரியங்களில்

அதேபோல என் வாழ்வில் நடந்தவைகளை நீங்கள் நினைவு கொள்ளமுடியாது.

மேலே சொன்னதிலிருந்து நம்முன்னே மாருத ஒரு தத்துவம் (சக்தி) இருந்துகொணடு நம்முடைய விழிப்பு வாழ்வு, கனவுலகம், தூக்க இன்பம் மூனறையும் அனுப வித்துக் கொண்டிருககிறது என்று தெரியவருகிறது. விழிப்பு நிலையில் இருக்கும 'ஐயா' கனவுலகில் இல்லை. ஆனுல் விழிததவுடன அவா தாம கனவு கண்டதை நினைவு கொள்கிருர். எலலா நிலையிலும் நின்று கவ னித்து நமக்கு அறுபடாமல் தொடர்நத ஒரு வாழ்வைத் தருகிறதே அதுதான் சர்வ சாக்ஷியான ஆத்மனுகும்.

இந்தச் சாக்ஷியுடன ஐககியமாவதுதான் அகத்தின் அறியாமைத தளையை நீககுவதாகும. சாவு, எல்லைக குட்படுதல், வருததம், கையறுநிலை, வெற்றி தோல்வி, இனபம் துன்பம் இப்படிப்பட்ட வாழ்க்கையின் ஆயிர மாயிரம் துன்பக் களைகளெலலாம் இந்த 'அகத்' தினு டையதுதான். சர்வ சாட்சியான உணமைககு இநத சம்சாரம் வேற்றுப் பொருளே; ஆத்மனுடன ஐககிய மாவதில ஆதமனை அறியும் ரகசியம் இருக்கிறது. அது அறிந்தவை, அறியாதவை இரணடிற்கும் அப்பால இருக்கிறது.

இஹ சேத அவேதீத அதசதய மஸ்தி
ந சேதி ஹாவே தீத மஹதீ விநஷ்டி:
பூ தேஷு பூ தேஷு விசிதய தீரா:
ப்ரேதய அஸமான லோகாதம்ருதா பவந்தி 2.5

ஒருவன் (பிரும்மத்தை) இங்கேயே இந்த உலகத் தில் அறிந்துவிட்டால மனித அபிலாஷைகளின் எல்லை அடையப்பட்டது. அறியவில்லை என்ருல் நாசம அதிகம் தான். ஞானிகள எல்லா ஜீவனகளிலும் ஆத்மாவைக் கண்டு இநத வாழ்க்கையிலிருந்து ஏறி அமரத்துவ மடைகிருாகள.

அனபுகொணட சுருதித் தாய் தன் வளர்நத குழந் தைகளுககு இநத எசசரிக்கையை விடுவதன் மூலம தன் ஆர்வம கொணட அன்பை வெளியிடுகிருள. இந்த வாழ்விலேயே நம கட்டு விலங்குகளிலிருந்து விடுபடும் முயற்சியில் வெறறி பெற வேணடும. விடுதலை மனித னின பிறப்புரிமை. அதை அடையத்தான் அவன் அவ

தாரம் எடுத்திருக்கிறுன். பல்லாயிர உடல்கள் எடுத்து பல குடம் கண்ணீர் உகுத்தபிறகு சாவ தயாபரஞன எம்பெருமான் இந்த மனித உடல் எடுக்கும் பாக்கியத்தை நல்கி இருககிறுன்.

''அரிதரிது மானிடராவதரிது, மானிடராயினும் கூன், குருடு, செவிடு, பேடு, நீங்கிப பிறப்பதரிது,'' அதறகும மேல் நலல வளாநத உடல, மன, ஆன்ம அமைப்பைப பெறுவது பல ஜன்மங்களில் தொடர்ந்து செயத தவப்பயனே என்று சாஸதிரங்கள் கூறுகின றன அவவளவு கிடைத்தும் உண்மையைப் பற்றி ‿‿கள் தரும் ரகசியததைக கேட்க வாய்ப்புப் பெருத போஞல் முடிவடையாத கண்ணீாக் கிடங்கில் இருளினூடே அலேய வேண்டியதுதான் உங்களுககெல் லாம் பாராட்டுக்கள்! இநதத் தலைமுறை மககளில் நீங்கள் பொறுககி எடுத்த பாககியசாலிகள. பல காலம் தவம் செய்து உபநிஷதம் படிதது ''பாதிக்கப்பட்டு விளங்தும் உண்மையைப் (Conditioned Truth) பறறி யாவது அறிந்து கொணடீர்கள.

நீங்கள் ஒவ்வொருவரும் பல லட்ச மக்களுக்குப் பிரதிநிதியாகிறீர்கள் மககள, பாவம், மனிதர்களாயில லாமல் இரணடு கால் புழுக்கள் போல அழுககில் நெளி கிருர்கள, மயககம் கொண்டு வழியின்றி. அதஞல் சுருதி சொல்லுகிறது. ''ஆத்மா நாம் என்று அனுபவம பெற முயலாத மனிதன் வாழ்வு நாசமே.''

மனித முயற்சியின் சரித்திரத்தில துறவு மனப் பானமை இல்லாமல் தங்கும் வெற்றி ஒரு பொழுதும் அடையப்பட்டதில்லை இயற்கையே இந்த உண்மையை உரக்கக் கூவி நிற்கிறது. மீன்கள் பறவையாகிப் பறக்க ஆசைப்பட்டால் நீரில் நீஞ்சும பெருமையை விடத் தயாராயிருக்க வேண்டும். பறவைகள் மிருகங்களாக வளர வேண்டுமென்ருல் பறககும் ஆசையை விட்டுவிட வேணடும். மிருகங்கள் சூட்சுமமான மனதையும் புததியையும் பெற வேணடுமென்ருல் ஸ்தூலத் தன்மை யுள்ள உடலேயும், உணாவையும் விட்டுத் தொலேக்கத் தயாராக வேண்டும. குரங்கு மனிதன் வாலேயும், காட்டு வாழ்வையும்விடத் தயாராயிருந்தால், கோட்டு சூட்டு அணிந்த இன்ஷியூரன்ஸ் ஏஜண்டாகவோ அல்லது அலறும் அரசியல்வாதியாகவோ ஆகமுடியும். மனிதன் தெய்வத் தனமைக்குச் செல்வது கடைசி வழிநடை.

அதறகு வழிமுறை காட்டுகின்றன சுருதிகள். ஒரு தியாகம செயதால போதும், மனிதன தெய்வ வாழககையை அடைந்து விடுவான் என்று ஞானசிரியர் கள எல்லாம் உரைக்கின்றனர். அகத்தை ஒழி.தேவனுகு. அது முடியும். இஙகேயே இப்பொழுதே முடியும். பெயர் தோற்றம் கொணட ஒவவொரு ஜீவனுள்ளும தானே வெளியாகிக் கொணடு நிற்கும் அந்தத தத்துவத்தை அறிந்துகொள. இதுவே நலல ஒரு வழிபாடு. அதுவே நம்மை உணமையின் கர்ப்ப கிருஹத்துககு அழைததுச சென்றுவிடும். அவனை நாம் நேருககு நேர் சநதித்து அவனுளளே ஒடுங்கி அவனுகிவிடுவோம் தெய்வத்தைப் பாாததவுடனே மனிதன் மறைகிறுன் தெய்வமாகிறுன் 'பிருமமவித் பிருமமைவ பவதி.'

## இங்கே—இதோ

மனிதன் பெளதீக ஆசைகளையும விருபபங்களையும் தேடி அழிகிறுனே எனறு சுருதி படும் வேதனையை நாம் பார்த்தோம். மனிதனுகவும பிறநது எல்லா இந்திரியங களும் நலல நிலையிலிருக்கப் பெற்றவனுகி நலல மனம் புததியும் கொண்டு சதபுருஷர்களைச சந்தித்து, ரிஷி, முனிவாகளுடைய ஞானச சொற்களைக் கேட்கவும் வாயப்புக் கிடைத்திருகக மனிதன் எவவளவு அதிர்ஷடம் வாயநதிருகக வேண்டும்! அதனுல்தான் அன்பு முதிர்சசி யால சஙகடம் கொண்டு சுருதித் தாய, "இங்கே அதை அடையாதவனுக்கு நாசமே!" என்று பேசுகிறுள்.

எல்லா ஜீவன்களுக்குளளும் அந்த மெய்மையைத் தேடிக் காணத் தெரிநத கெட்டிக்காரர்களை ஆத்ம ஞானந்ததில நிலைககிறுாகள. அபபடிப்பட்டவா கள் (ப்ரேத்ய அஸ்மான் லோகாத்) இந்த உலகைவிட்டு (அம்ருதா பவந்தி) அமரராகின்றனா.

இந்த வரி இதைபபோனற மற்ற வரிகள் இவறறின் அடிப்படையில் வேதாநதிகளில் இரணடு வகைக் கொள்கையினர் ஏற்பட்டிருககினறனர். ஒரு வகையினர் இந்த உடல் அழிந்து இறநதால ஒழியப் பூரணத்துவம் அடைய முடியாது எனறு பேசுகின்றனர். மற்றவர் சுருதிக்கு வேறு ஒரு கருத்துச சொல்லுகின்றனர்; வேறு வகையில வாதம புரிநது தெய்வத தனமை இந்த வாழ்க்கையிலேயே அடையப்படடுவிடும என்பது அவர் கள் கூற்றுகும். முன்னவர்கள் விதேஹ முக்திதான்

சாத்தியம் என்கிறார்கள். பின்னவர் ஜீவன் முக்தி நிலையை ஒத்துக்கொளகிறார்கள்

டல் சங்கராசசாரியார் இரண்டாம் கருத்தை ஆதரிக்கிறார்கள். அவர்கள சொலலுவது சரி எனறும படுகிறது. சின்மயாவும் அதையேஒததுக்கொள் கிறாா. ஏனெனில் பல பெரியோாகள் இநத வாழ் விலேயே தங்கள பேச்சு மூலமும நேரடியாகவும இநத உடலிலிருந்துகொண்டே தெய்வப் பூரணத்துவம் கொண்ட அமர வாழ்வை ஏறறுககொள்வது முடிந்த ஒன்றுதான என்று காட்டித் தருகிறார்கள. ஆத்ம சாக்ஷாத்ரம இஙகேயே இப்பொழுதே முடியும்.

ஸ்ரீ சங்கராசசாரிய சுவாமிகள் 'குரு'வினுடைய சாஸ்திரீய லக்ஷணங்களின் ஆதாரததின் மேல தன்னுடைய வாதத்தைத் தெளிவுறுத்துகிறார்கள் நாம் அதை ஏற்கனவே பாாததிருககிறோம். குருவானவர் சாஸ்திரஙகள அறிந்தவராக இருப்பதுடன் தெய்வத தன்மை (உணர்வையும்) பெறறிருத்தல் வேண்டும். சாஸ்திரம் படிததிருக்கிறார் எனபதறகாக ஒரு பண்டிதர் குரு ஆகிவிட மாட்டார். சாதகன பிரும்ம வித்தையைப் பற்றிக் கூறும் சாஸ்திரங்கள் பேசும பூரணத்துவ நிலையைததன் முயற்சியால் அடைநதவுடனேயே இறந்துவிட வேணடும என்று நாம் கருதவேணடியிருக்கும. விதேக முக்தியை ஒத்துக்கொணடால சுருதியின் அநத வாககியத்திற்கு இநதக் கருத்தைத்தான ஏற்க வேண்டி நேரிடும். அந்த நிலையில பிரம்ம நிஷடரான ஒரு குரு கிடைப்பது முடியாத ஒனறாக நின்றுவிடும். அதனால்தான் சங்கராசசாரிய சுவாமிகள ஜீவன் முகதி நிலையை ஒபபுக் கொள்கிறார்கள்.

"இந்த உலகத்தைவிட்டு அவன் அமானாகிறான்," எனறு சுருதி சொல்லுகிறது. அதற்கு எனன கருத்து? சங்கராசசாரியா அவாகள சொல்லுகிறபடி, சாவுக் கதவின் வழியே ஏற்படும் உடல் மறைவு என்பதல்ல அதன் அாததம். கீழ்த்தரமான வாழ்ககையின் மனித மயக் மேலேறி ஒரு தெய்வ உணர்வைப் பெற்றுத்தானே கடவுளாக அறியும நிலையைத்தான் அது குறிக்கும்.

வேதாந்த சாதனையின் மூலம் முழு வளர்ச்சி பெற்ற ஒருவன், 'அமிாதாபவந்தி' அமரனாகிறான்

என்று சுருதித் தாய் உறுதி கூறுகிருள். ஜீவன் பெற்றிருக்கும் உடல, மனது ஆகியவறருல் ஆன சாதனம் பௌதிகமானவை. அவை கட்டுக்கும் எல்லைக்கும உட்பட்டவை. ஆகவே அவை கொண்ட சாதனமான இநத உடல அழியாததாக இருகக முடியாது. பிறகு எப்படி அமரனுகிருன்? இநதசசுருதியை அறிந்துகொள்வதற்குச் சொல்லின் நேரான பொருள உதவி செயயாது. குறிப்பாகச் சுட்டப்பபடும் ஆழமான பொருள்களை அறிந்துகொள்ள வேண்டும

நாம் நம்மைப்பற்றித் தப்பான கருத்தைக் கொண்டிருககிறேம். அதை ஒழித்து ஆத்மா எனகிற நம்முடைய சுத்தத் தன்மையை உணர்ந்து கொள்வதுதான் ஆதம போதமாகும. அழுத்தமான சுய அனுபவததின் மூலம் “நாம் அழியாத ஆதமாவே. அழியும உடல் அல்ல,” என்றி அறிநதுகொணடால் நம்மைச சாவு பயமுறுத்தாது சாவின் விஷக் கோடுகககு நைந்துவிடும் அப்படிபபட்டவனுக்குச சாவு வெறும் ஒரு சிறியசம்பவமாக மாறிவிடும; சாதாரணமாக நிகழும நீர் முழுக்கு அஉலது உணவு போன்றதாகிவிடும். உடையை மாற்றுவது போனறு அதை அவன் உணர்வான உணமையில் நாறறமும் துனபமும் நிறைநத கனவு வாழ்க்கையின எலலைக்குள் அடிமையாயச சஙகடப்படும துன்பத்தை விட்டு வெளியேறுவான.

## மூனரும் அத்தியாயம்

முன்னுரை மூன்ரும் அத்தியாயம் ஒரு கதையாகும். அக்கதை இதுவரை பேசப்பட்ட உண்மைகளைச் சித்திரிக்கிறது.

தேவர்கள் ஒரு முறை அந்தப் பரம்பொருளின் உதவியால் அசுராகளை வெற்றி கொண்டனா. வெற்றி போதையால் அகங்காரம கொண்டிருந்தனர். அவர்களுக்கு அருளவேண்டும் என்று எண்ணி, அந்தப் பரம் பொருள் அழகான யக்ஷ உருவத்தில் தரிசனம் தந்தது. இந்தப் புதுக்காட்சியைக கண்ட தேவர்கள அக்னியைக் கூப்பிட்டு, ‘அது யாரென்று விசாரித்து வா, என்றனர். அக்னியும் தன் சக்தியில பெரு நம்பிக்கை கொண்டு அந்தக் காட்சியிடம் சென்ருன். அந்தப் பரம் பொருள் கேட்ட கேள்விககு, தான அக்னி என்றும், எதையும் எரித்து விடுவேன் என்றும் பெருமையுடன் பதில் சொன்

ஞன். அந்தப் பரமேஸவரம ஒரு புல்லே அவன் முன்னே போட்டு, அதைச்சாம்பலாககு எனறு பணிததான். நெருப்புத்தேவன் எரி நட்சத்திரங்கள், சூரியன் எல்லோருககும் அரசன். அநதப் புலலே நெருங்கவும முடியாமல் நின்ருன. தோல்வியிஞல முகம் தொங்க அவன் திரும்பிஞன். தேவர்கள் கேட்ட கேளவிக்கு அவன் சொன்ன பதில் 'எனக்குத தெரியவிலலே' என்பதுதான்.

தேவர்கள் அறிய வேண்டும் என்ற ஆசை காரணத்தால் மீணடும் வாயுவை அனுப்பிஞர்கள். வாயுவும் அக்னிக்குச் சற்றும் குறையாத அகங்காரத்துடன அவனேயும் மிஞ்சிப பெருமை பெறலாம் என்று ஆவலுடன் வநதான். சக்திக்கெலலாம் சக்தியானஅநதப் பரம பொருள காற்றின அரசனுடைய தற்பெருமையைக் கண்டு உள்ளூர நகைததுககொண்டது வாயுவையும அந்த யக்ஷன் யாரெனறு கேட்டான்.;வாயுவும் மார்பு நிமிர்நது, "நான உலகத்தையே காகிதப் பநதுபோல் ஆட்டி வைக்கும் வாயுவென்பான," எனறு சொன்ஞன்.யக்ஷன முன் போலவே ஒரு புல்லே முன இட்டு, "இதை முடியுமாஞல் நகர்த்து" எனறு சொலலிறறு ஆஞல அந்தச் சக்தியின்அருளனறி யாரா எனன செயய முடியும்? வாயுதேவனும்திடீரென்று இழநதவலுவிற்குக்காரணம் தெரியாமல தலேயைத் தொஙகவிட்டுககொண்டு திருமபி வந்தான. அக்னியும், வாயுவும் தோற்ற கதையைக கண்டு தேவாகள அச்சம் கொண்டு தங்கள் அரசனை இந்திரனிடம் சொல்லினர் அவாகள பிரார்த்தனேயை ஏறறு இநதிரன் தானே சென்ருன். அரசனுக்கேற்றபடி பெரும் பாடம கறபிக்க வேண்டும் என்று எண்ணி அந்தப் பரம சக்தி தன் அழகிய உருவத்தை மறைததுக் கொணடது. தேவர்க்கரசன அதஞல மனம் கலஙகவில்லே. மறைநத காரணத்தாலேயே அதைப்பற்றி அறியவேணடும் என்ற ஆவல் உணடாயிற்று. திருமபாமல முன்னேறிச் சென்ருன்... .எதிரே அவன் பார்த்தான்.அதிசயம்! இமயன் மகளான உமாதேவி அருள் கை ஏந்தி நின்ருள். அவளிடம் கேட்டு, 'அநதயக்ஷன் வேறு ஒருவருமலல.தேவதைகளுக்கு அருள வநத அந்தப் பரம பொருளே' என்று தெரிந்து கொணடான். உமாதேவி, "நீங்களே உங்கள் சக்தியாலே ஜெயித்து விட்டோம் என்று எண்ணுவது முட்டாள்தனம," என்று எச்சரித்தாள்.

உள் சாரம : கதையை மட்டும் படித்தால் அராபிய இரவுகளில் வரும் கதைகளே விட எந்த விதத்திலும்

சிறந்ததாகத் தோன்றுது. ஆனுல ஊக்கம் கொண்ட சாதகனுக்கு இநதச சிறுபிள்ளைக கதையில் மிக ஆழ்ந்த கருத்துக்கள் தோன்றும். சுருதி கூறும இந்தக கதையின் ஆழ்ந்த பொருளை அறிய முயல வேண்டும்.

இது வரை நாம் சொல்லி வந்த உபநிஷத உண்மை கள் இநதக கதையில எடுத்துச் சொலலப்படுகின்றன. இதுவரையில் நாம் ஆதமாவின் தனமை, அதன் பெருமை, இவறறைப்பறறிப் பார்த்துவந்தோம் ஆனுல் சொன்ன வகை தத்துவ ரீதியாகவும் உள்ளூர உணாநது பாாக்க வேண்டியதாகவும் இருந்தது. இபபொழுது புறத்தே கணடு தெளியும்படியாக ஒரு சிறநத முயற்சி செயயப் பட்டிருக்கிறது.

கதையைப் புரிந்துகொள்ள சாஸதிரபரம்பரையும, சாஸ்திரீய நம்பிககையும ஓரளவு தெரிந்திருகக வேணடும். தோறறமிலலாத ஒனறிலிருந்து தோனறும் உலகம் எப்படிததோனறியது என்று நாம் பார்ததோம். ஆகாசம, வாயு, அக்னி ஜலம், கடைசியாக பிருதவி எனற வகையில படிபபடியாக அதிக ஸ்தூலமான பொருளகள ஏறபட்டன. பூமிதான் மிகவும ஸ்தூல மானது.

இந்த ஐந்துக்கும தனித்தனி குணங்கள் உணடு. ஆகாசத்திறகு சப்தகுணம். சூக்ஷமமான அடுத்த வாயு வுககு ஆகாசத்தின குணமான சப்தத்துடன் அதிகப் படியாக "ஊறு" (தொடும உணர்வு, ஸபரிச உணாவு) குணமும் உண்டு. இப்படியே பினனுல வரும் ஒவ்வொரு தத்துவத்திற்கும் தன்முன் தத்துவத்திற்குள்ள குணத துடன் சேர்நது தனக்கென்ற குணமும் உண்டு நெருப் புக்குச சப்தம், தொட்டால் உணரப்படும் சகதி, இவற றுடன் தோற்ற மென்ற விசேஷ அதன் குணமும உண்டு. நீரில நெருபபுக்குள்ள தன்மைகளுடன் ருசி என்ற அத ற்கே உரிய குணமும் உண்டு. பூமியில் முன் சொனன நாலு குணங்கள் தவிர வாசனை என்ற தனக்குள்ள விசேஷ குணமும் உண்டு. சாஸ்திரஙகள் தஙகளுக்குரிய தான மொழியில் இந்தத் தத்துவஙகள் இந்தக் குணங் களைக் காட்டும இந்திரியஙகளை ஆளுகின்றன எனறு சொல்லுகின்றன. காது, ஆகாசத்தின குணத்தை உடை யது. அது நெருப்பு ஆளும் கண்ணுககு உரியதான பார் வையைப் பெறவில்லை. இந்த சாஸ்திரீயக் கருத்துக்களை மனதில் கொண்டு, அர்த்தமற்றதாகத் தோன்றும்

(கேனோப நிஷத்தில் வரும்) கதையை மீண்டும் படிந் தால் அதன உட்பொருளை உணாந்து கொள்ளலாம.

உப நிஷத்தின் இந்தப் பாகம் வெறும் கதையைச் சொல்லுகிறது. ஆகவே அறிந்து கொள்வதில் சிரமம் இருக்காது. ஆகவே சுலோகங்களும், மொழி பெயர்ப் பும் ஒரே தொடராகக் கொடுககப் படுகின்றன.

மந்திரங்கள் :

ப்ரஹம ஹ தேவேப்யோ விஜிக்யே, தஸ்ய
ஹ பரஹ்மணோ விஜயே தேவா அமஹீயந்த
த ஐக்ஷந்த, அஸமாக மேவாயம விஜயோ
அஸ்மாக லேவாயம் மஹி மேதி 3.1

குரு : பிரம்மன் ஒரு முறை தேவதைகளுக்காக (அசுரர்கள் மேல்) வெற்றி கொணடு வந்தான் என்று சொல்லப்படுகின்றது பிரும்மத்தின் காரணமாகத் தான் வெற்றி கிட்டிற்று எனறுலும் தேவர்கள் அதனுல் பெருமை கொண்டனர். 'வெறறி நமககு, பெருமை நமககு' எனறு அவாகள் எணணினா

ததைதஷாம விஜஜ்ஞெள தேபயோஹ
பரா துர்ப்பபூவ, தந்ந வயஜானநத கிமிதம யக்ஷமிதி 3.2

பிரும்மன அவர்களுடைய வீண் தற்பெருமையை அறிநது அவர்கள் எதிரே தோன்றினுர் ஆனுல் அவாகள் அநத யக்ஷன் (போற்றத் தகுந்த ஆத்மா) யாரென்று தெரிந்து கொள்ளவிலலே.

தே க்ரிம அபருவன் ஜாத வேத யேதத விஜானீஹி
கிமேதத யக்ஷமிதி, 3.3

அவர்கள் அக்னியிடம் இவவாறு சொன்னாகள். "ஜாதவேத (எல்லாம் அறிந்தவனே) அந்தப் பெரிய சகதி யாரெனறு கணடுபிடி." அவன் சரி எனறுன்

ததேதி ததப்யத்ரவத தமப்யவதத கோஸீதி யகனிாவா
அஹமஸ மீதயப்ரவீஜ ஜாத வேதா வா அஹமஸமீதி 3.4

அக்னி அதனிடம் சென்றுன். அது அவனை 'நீ யார்?' என்று கேட்டது. அக்னி சொன்னுன்: "நானதான் அக்னி. எல்லாம் அறிநதவன்."

தஸ் மின்ஸ் தவயி கிம் வீாயமிதயபீதம் சாவம்
தஹேயம் யதிதம் ப்ருதிவ்யா மிதி

யக்ஷன் உருவிலுள்ள அது (பிரும்மம்). அந்தத் தன்மையிலுள்ள உனனிடத்தில என்ன ஆற்றல் இருக்கிறது? அக்னி பதில் சொன்னுன்: ''நான் உலகத்தின மேல் இருக்கும் எதையும் எரிக்க முடியும்.''

தஸ மை தருணம் நிததா வேதத த ஹேதி, ததுபப்ரேயாய ஸாவஜவேன, தன்னசாக தக்தும், ஸ தத ஏவ நிவவ்ரு நைததசகம் விஜ்ஞாதும ய தேதத் யக்ஷ மிதி [தே
3.6

அது (பிரம்மன) அவனுக்கெதிரே ஒரு புல்லை வைதது 'அதை எரி' என்று கேட்டுக் கொண்டது. அகனி தன் ஆற்றல எலலாம் கொண்டு அதனமேல் பாயந்தது. அவனுல அதை எரிக்க முடியவில்லை. எனவே அவன தேவாகளிடம் திரும்பி வநது 'அநத யக்ஷன் யார் என்று எனக்குத தெரியவிலலை' எனறு சொல்லி விட்டான.

அத வாயுமபருவன் வாயவேதத விஜாநீஹி
கிமேதத யக்ஷமிதி ததேதி 3.7

பிறகு தேவாகள வாயுவிடம் சொனனுர்கள. ''காற்றுககுத் தேவனே. அந்த யக்ஷன் யார் என்று கணடு வா''. அவனுமசரி எனருன.

ததபயதரவத, தமபயவதத கோ ஸீதி, வாயுாவா
அஹமஸ மீதயப்ரவீன மாதரிச்வா வா அஹமஸமீதி 3.8

வாயு யக்ஷனிடம சென்றது, யக்ஷன அவனை யாா என்று கேட்டது. வாயு சொனனுன்; ''நானதான் வாயு நான சாக்ஷாத மாதரிச்சவன (ஆகாயத்தில் சஞ்சரிப் பவன).''

தஸமினஸ தவயி கிம வீாயமிதயபீதம ஸர்வமாததீயம
யதிதம பருதிவயாமிதி. 3.9

''உன்னிடம் என்ன சக்தியிருககிறது? நீ எநதத் தன்மை பெற்றிருககிருய்?'' என்று யக்ஷன் கேட்டது. வாயு சொன்னுன். ''உலகில் எதையும் அடித்துத் தள்ளி விடுவேன்.''

தஸ்மை தருணம நிததா வேததாதத ஸவேதி,
ததுபப்ரேயாய ஸாவ ஜவேன, தந்நசசாகாதாதும்,
ஸதத ஏவ நிவவ்ருதே நைதததசகம விஜஞாதும
யதேதத யக்ஷ மிதி. 3.10

யக்ஷன் அவனுக் கெதிரே ஒரு புல்லை வைத்துச் சொல் விற்று. 'இதை அடித்துத் தள்ளிவிடு'. வாயு தன் முழுச் சக்தியுடன் அதை நெருங்கினுன். ஆனுல் அதை நகர்த்த முடியவில்லை. எனவே அவன் தேவர்களிடம் வந்து சொன்னுன். "என்னுல் அந்த யக்ஷன் யார் என்று கண்டுபிடிக்க முடியவில்லை."

அதேதந்நர மப்ருவண—மகவந் நேதத விஜா நீஹி,
கிமேதத யக்ஷமிதி, ததேதி ததப்பயதரவத தஸமாத
திரோதத்தே 3.11

பிறகு தேவர்கள தேவர் தலைவனுன இந்திரனிடம் சொன்னுர்கள். "ஓ மகவனே! (சொத்தும் சக்தியும் பெற்ற பெரியோனே அல்லது பூஜைக்குரியவனே என்று பொருள்) யக்ஷன யார் எனறு நீ கண்டுபிடி." அவனும் ஒததுககொண்டு யக்ஷனை நோக்கி விரைந்து சென்ருன். ஆனுல் யக்ஷன் பார்வையிலிருந்து மறைநதுவிட்டது.

ஸ தஸ்மின்னே வாகாசே ஸ்தரியமாஜகாம
பஹுசோபமானும் உமாம, ஹைமவதீம, தாம
ஹோவாச—கிமேதத் யக்ஷமிதி 3.12

அந்த இடத்திலேயே அவன் ஒரு மங்கையைக் கண்டான், அழகியான உமா — இமய மலையின் மகள். அவன் அவளை அந்த யக்ஷன் யார் என்று கேட்டான்.

## நான்காம் அத்தியாயம்

இந்தக் கதையை, நாம் ஏற்கனவே பேசிவநதுள்ள சாஸ்திர சித்தாந்தங்களைப் பின்னணியில் வைத்துப் பார்த்து, பார்ப்பதற்குச் சிறு பிள்ளைக்கான கதையைப் போல் இருக்கும் இந்தக் கதையின் ஆழ்ந்த கருத்தை அறியலாம். ஐந்து தத்துவங்களும், ஐந்து இந்திரியங் களின் தேவதைகள் என்று சாஸ்திரம் சொல்லுகிறது.

அப்படிப் பார்த்தால்: வாழ்க்கையின் சிறந்த மதிப்புக்களான அன்பு, பொறை, பொறுமை, கருணை தானம், தயை இரக்கம் எல்லாம் தேவர்கள் என்று பொருள்படும். அவர்கள் அரககர்களை (வெறுப்பு, ஆதாரமற்ற விருப்பு வெறுப்புக்கள, கோபம், பொறுமை, சுய நலம், அகங்காரம், வீண் பெருமை முதலிய கீழ்த்தரமான மிருகக் குணங்களை) நித்திய ஆத்மாவின் உதவியால் வெற்றி கொணடு விட்டு ஒரு

தப்பபிப்பிராயத்திலும், தான் என்ற வீண் கர்வத்திலும் ஆழ்ந்து சிதறினா. ஒரு சாதகன்கூட ஆரம்பத்தில் ‘இவ்வளவு நேரம தியானத்தில செல்கிறேன். இந்தப் பெரிய குணங்களை யெல்லாம் பழகுகிறேன். இந்த அனுபவங்களெலலாம் எனக்கு ஏற்பட்டிருக்கின்றன,’ எனறு பெருமையடித்துக் கொண்டு திரியலாம். அந்தச் சமயங்களிலெல்லாம பரமேஸ்வரன் யக்ஷ உருவததில அதாவது மெய்ம்மையின் தனமையைப் பற்றிய ஒரு சநதேக உருவததில் தோன்றி அவனைத் தன்பால இழுத்துக் கொள்ளுகிறார்.

மீண்டும் உண்மையைத் தேடும் அவர்கள் வளாசசிக குறைவின் காரணமாக அந்தப் பரம் பொருள், தனனைவிட்டு அப்பால் உள்ள ஒரு பொருள் போன்று எணணி அதை எங்கேயோ தேட விளைகிறார் கள். அகனி செனறு யக்ஷனை அறிய முடியாமல் திருமபி னான் என்றால் இந்திரியங்களால், கண், காது, வாய் முதலிய பொறிகளால அந்தப் பரம உணமையை புறத்தே உள்ளே ஒரு தனிப் பொருள்போல் பார்த்து அறியமுடியாது எனறு ஒரு ஆழ்ந்த கருத்தைக் காட்ட எழுந்த கதையாயிருக்கலாம். அக்னி அந்தச் சகதிககு எதிரே அதன் அருள் இல்லாமல் ஒரு புல்லை எரிகக முடியவில்லை என்றால் அதைப் போல நம்முடைய கணணும் கண்ணின கண்ணான அந்தப் பரம் பொருள் இல்லாமல் தன் செயலில ஈடுபட முடியாது. அதைப் போலவே வாணியின் வாணியான அந்தப் பொருள் இன்றி மௌனமாயிருகக வேண்டியதுதான்.

‘என் தனிப் பலத்தால் உலகத்தையே ஆட்டி விடுவேன்’ எனறு மாாதட்டிச் சென்ற வாயுவும் வெட்கத் துடன் திரும்பி வர வேண்டியதாயிற்று. உண்மையில் வாயுதேவனும் யக்ஷனின் சக்தி இல்லாமல் தான் ஒரு புலலைககூட அசைகக முடியாது என்ற பெரும் உண்மை யைக் கண்டு கொணடான். வாயு நம்முள்ளே கந்தம், பிள்ளைப்பேறு இரண்டுக்குமான அதி தேவதையாம். ஆகவே கதையின கருத்து நாம் அந்தப் பரம் பொரு ளில்லாமல் நுகரவும் முடியாது. பிள்ளை குடடிகள் பெறவும் முடியாது.

சுருங்கக் கூறின் வாயு அக்னி என்ற இரண்டு பெரிய தேவதைகள் ‘யக்ஷன் யார்’ என்று அறியச் சென்று அடைந்த தோல்வி உபநிஷத்தின் கருத்தை மீண்டும் எடுத்துச் சொல்லுவதுதான். அந்தக் கருத்தாவது :

"அநய தேவ தத் விதி தாததோ அவிதிதா ததி"

அதாவது அது அறிந்ததற்கு மாறுபட்டது, அறியாத தற்கு அப்பாற்பட்டது அது அறிகிறவனன்றி வேறில்லை.

கடைசியாக சாதகனிடம் உள்ள நற்பண்புகளான தேவர்கள் இந்திரனை அணுகுகின்றனர். இந்திரன் இந்திரியங்களுக்கு அரசன் என்றும் பொருள்படலாம். அந்தக் கருத்தில அது மனது என்ருகும். உயர்ந்த பொருளைத் தேடும் சாதகன் அந்த யக்ஷனை ஆத்மாவைத் தேடத் தனியாகத் தாகம் கொள்ளும் போது அறிவின்மை, மயக்கம் காரணமாக முதலில் இந்த ஞான கர்மேநதிரியங்கள் உதவியால் அதை அறிந்து கொண்டு விடலாம் என்று எண்ணலாம். அவன் தாகம் உள்ளபடி பெருத்ததாக இருந்தால் அவன் இந்திரியங் களின் அரசனை மனதை அணுகி அதைப்பற்றி அறிந்து சொல் என்று கேட்டுக் கொளவான்.

சாதகனின் மனது இநதிரன் நிலையை அடைந்து விடும் பொழுது அந்தப் பொருளைப் பணிவுடனும் சுய நலம் தற்பெருமை இன்றியும் நெருங்குகிறது. மனம் நெருங்கநெருஙக அந்தத் தரிசனம் மறைகிறது. சாதகன் ஆத்ம தரிசனத்திலும் இந்த அனுபவம்தான் ஏற்படும். அநேக சாதகர்கள் இந்த நிலையிலிருநதே அவசரப்பட்டுக் கொண்டு திரும்பி 'யக்ஷன்' இல்லை என்று சொல்லி விடுகிருர்கள். தர்க்க வாதிகளும், புத்தர்களுள் சூன்ய வாதிகளும், லட்சியத்தை அடையாமல் ஏமாந்து திரும்பிய இந்திரனுக்கு உதாரணமாகும்.

சுருதி இந்த மாதிரி ஏற்படவல்ல பெருங் கெடுதலை எடுத்துக கூறுகிறது. உண்மையைப்பறறி ஒரு காரிய சாத்தியமான அறிவைப் பெறும் வரை திரும்பககூடாது என்ற புத்திமதியை இந்திரன் தன்மை அவன் அடைந்த வெற்றி இவற்றின் மூலம் சொல்லித் தருகிறது. உண்மை யில் இநதிரன் நிலையை அடைந்த சாதகன்தான் 'உண்மைப் பொரு'ளைக் காண ஏற்றவன்.

தான் தேடி வந்த பொருளின் திடீர் மறைவில் மனம் கலங்காமல் இந்திரன், நம்பிக்கையும், காண வேண்டும் அறிய வேண்டும் என்ற ஆவலும் துடிக்கக் காட்சி மறைந்த இடத்தைக் குறிவைத்துப் பார்க்கிருன். பார்ககும்போது அவன் ஒன்றையும் எதிர்பார்க்க வில்லை. ஒன்றுக்கும் ஆசைப்படவில்லை. விருப்பம்

கொள்ளவில்லை. ஏற்கவில்லை. உள் அமைதியும் விழித்த உணர்வும் கொண்ட அந்த நிலையில்தான் யோகிகள் ஞான தேவியை உணர முடியும் என்று சுருதித் தாய் சொல்கிறாள்.

சாதகன் இந்திரனைப் போன்ற உதாரமான மன ஆற்றல், தெய்வீக உறுதி, உண்மையான இதயம், விருப்பமற்ற மனது, என்றும் விழிப்புடன் இருக்கும் புத்தி ஆகியவற்றை சாதனைமூலம பெற்றிருந்தானானால் அவன்தான் மிகவும் தகுதி வாய்ந்த அதிகாரி எனறு வேதாந்தம் சொல்கிறது. வாழ்க்கையில் உடனடியாக ஏற்படும் பிரசினைகளை ஏதோ ஒருமாதிரி தவிர்க்க உதவும் ஒரு ஏற்பாடாக மதத்தைக் கொள்ளககூடாது. ரேசில் கடைசிப் பத்து ரூபாயையும் வைத்துத் தோற்று விட்டுக கோவிலுககுள் சென்று பிரார்த்தனை செய்பவன் மதத்தை அழுக்காக்குகிறான். அந்தச் சமயங்களில் ஆண்மையிழந்து வெறியில் தன்னை மாய்த்துக்கொள் கிறானே அவனை விட இழிந்தவன் இவன்.

ஈசுவர தரிசனத்துக்கென இந்திரன் அதிக நேரம் காத்திருககவில்லை. நம இதயேசுவரன் கருணை நிறைந்த வன். உண்மயான பகதாகளை ஒரு நிமிடம் கூட அதிக மாக ஏங்கிக் களைக்க விடுவதில்லை. ஹிமவானின் மகள, இமயக குகைகளிலேயே பிறந்த பிரும்ம வித்தையின் தேவதை, யக்ஷன் மறைந்த இடத்திலேயே தோற்றம் அளித்தாள். வளர்ச்சியடைந்த ஆத்மசாதகனுக்குச் சுருதித் தாய் என்றும் அருள்புரிகிறாள். ஆசுவாசம் தந்து வழிகாட்டி அழைத்துச் செல்ல என்றும் தயாராய் இருக்கிறாள. இந்திரன் முதன்முறையாக இமய குமரியிட மிருந்து யக்ஷன் பரமாத்மா கொண்ட நேரான தோற்றம் தவிர வேறில்லை என்று தெரிந்து கொள்கிறான், கனவில் இருந்து மயக்கம் அதன் காரணமாக ஏற்படும் காயங்கள இவற்றில் உழலும் ஜீவனை அதன் அர்த்த மற்ற பெருமைகளிலிருந்து காக்க அது அந்தத் தோற்றம் எடுத்தது.

வித்தையின தேவியின் வாயிலிருந்து தெரிந்து கொண்ட அநதப் பேச்சளவு ஞானத்தை பரோக்ஷ ஞானம் என்கிறோம் இதுமட்டும் ஒருவனைப் பரம லட்சியத்திற்கருகே அழைத்துச் செல்லமுடியாது. அழுகைகள், சோதனைகள் இவற்றிற்கு அப்பால உள்ள முழுமையின் தவத்திற்குச் செல்ல இந்தக் கேள்வியறிவு போதாது. கட்டுகள், எல்லைகள் நீங்கிய இடமே

மோக்ஷம். அங்கே, தேசம், காலம், ஆபத்து என்ற மூன்று முனை கொண்ட பாவி வரமுடியாது. சிஷ்யன் ஆசாரியர்கள் கூறும் உண்மைகளைக் கேட்டுக்கொண்டு அவைகளை நேரடி அனுபவத்துக்குள் கொண்டு வருதல் வேண்டும். அப்பொழுதுதான் அந்த நிலையை அடைய முடியும். இந்த ஆத்மாதான் எங்கும பரவி நிற்கும் அகண்ட ஆத்மா என்று உணரவேண்டும. அப்பொழுது தான் மயக்கங்களும், லாபமற்ற துன்பங்களும் ஒழியும்.

## பாதிக்கப்பட்ட பிரும்மன் (Conditioned Brahman

(நிலை மாற்றத்திற்குட்பட்ட பிரும்மன்)

உதாரணங்கள், விளக்கக் கதைகள், ஒப்புமைகள் கதைகள் எல்லாம் விவரிக்கமுடியாத ஒன்றை விளக்குவதற்காக உபநிஷத்தில் உபயோகப்படுத்தப்படு கின்றன. ஆகவே அவை ஒன்றும் வார்த்தைக்கு வார்த்தை உண்மையாய் இருக்கமுடியாது, அது போலவே அந்தப் பொருளும் பூராவாக விளககிவிட முடியாது. எனவே கதையால் லாபமடைய வேண்டு மென்றால் சிஷ்யன் நன்றாக ஆழ்ந்து யோசித்துப் புரிந்து கொள்ளவேணடும்.

ஒரு விதத்தில் பார்க்கப்போனால் பக்தி மார்க்கத் தில் மூர்த்திகளைப்போல, கதைகள் வேதாந்த மார்க்கத் தில் உபயோகப்படுத்தப்படுகின்றன. கோவிலிலுள்ள எந்தக் கல் உருவமும பக்தனுக்கு அமைதியையும் இன் பத்தையும் பூரணமாகத் தந்து விடமுடியாது. ஆனால் மூர்த்தியில்லாமல் ஆத்ம முன்னேற்றம சாத்தியமா காது. மூர்த்தி வழிதான்-ஆத்மபோதம்தான்-இலட்சி யம். இலட்சியத்திற்குப் பதில் வழியை வைத்துக கொண்டு குழம்புவது வருத்தத்திற்கு அழைத்துச் செல் லும வழியில் நடந்து செல்வதாக முடியும். பக்தி மார்க் கத்தில் மூர்த்தி சம்சாரத்திலிருந்து எகிறித்தன்னுள்ளே ஆழும் நிலைக்குள் குதிக்க உபயோகப்படும குதிபலகை யாம். பக்தன் ஆத்ம சமர்ப்பணத்தின் மூலமோ அல் லது விவேகத்தின் மூலமோ பொய்யான 'தன்' கனவி லிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு தானே ஆத்மன் என்கிற உண்மையில ஒன்றும்போதுதான் உயர்ந்து சிறந்த அந்தத் தெய்வ உணர்வு அடையப்படுகிறது.

இந்த மெய்மையற்ற பொருள்களிலிருந்து ஒதுங்கி மெய்மைப் பொருளுடன் ஒட்டும் செயல்தான் பூர ணத்துவம் அடையும் முறையாம். மனதையும் புத்தி

யையும் தன் இஷ்டப்படி நடத்தும் வகை தெரிந்தவன் தான் இந்த முறையை நல்ல முறையில் கையாள முடியும். ஈசுவரனின் பெருமையையும் அழகையும் சிந்திக்க எண்ணி தியானத்தில் அமர்ந்தவன் வழியை மீறிப் புதர்களில் சிக்கிக்கொள்ளும்படி மனதை அனுமதிப்பவனின் ஆன்மீக யாத்திரை வருந்தத்தக்க ஒரு முறையில் முடிந்துவிடும். மனதை அடக்கி ஒருமுகமாகச் செலுத்தும் ஆற்றல் சாதகர்களுக்கு இஷ்டமூர்த்தியின் பாதாரவிந்தங்களில் பக்தி செலுத்துவதிஞலோ அல்லது விளக்கங்கள கருத்துக்களில் மனதை நிறுத்திச் சிந்திப்பதாலோதான் கிடைக்கமுடியும்.

ஒருவனுக்குப் பக்தி மூலமாகவோ கர்மம் அல்லது ஞானப் பாதை வழியோ, இந்தத் தியான சக்தி என்ற விலைமதிப்பற்ற பொக்கிஷமும், உள் தூய்மையும், கடவுளின் அருளும் கிடைத்துவிட்டதஞல் வழியின் கடைசிப் பகுதிப் பிரயாணத்தை அவன தானே முடித்துவிடுவான். சாதகன் தானே ஆத்மன் என்று உணரும் அநத வேளையில்—பக்தன் தன் இஷ்ட தேவதையுடன் பூரணமாக ஒட்டிவிடும் அநத வேளையில்தான் ஞானியும பகதனும் பரம பூரணத்வத்தை அடைகிறுன். சாதகர்கள் எந்த வழியும் நடந்து இந்தக் கடைசிப் பகுதியை நடந்து முடிக்கலாம். உண்மையாகவும் தொடர்ந்தும ஒரு வழியைப் பின் பற்றுவதால் ஒருவன் தான ஏற்றுக்கொண்ட வழியிடம் ஒருமாதிரி அன்பு கொண்டுவிடுகிறுன். சில சமயம் அந்தப் பள்ளததிலிருந்து வெளியேறித தெய்வ ஒளி வெளியில் வருவதற்குத் தைரியமும், துணிவும ஏன் சில சமயத்தில் பலாத்காரம் கூடத தேவையாய் விடுகிறது. கடைசிப் பகுதியைத் தாண்ட குரு ஒரு எத்து எத்திவிட வேண்டியிருக்கிறது.

பாரசூட்டில் ஏறும் ஒருவன் உதாரணத்தை நாம் எடுத்துப் பார்க்கலாம். இன்று எவ்வளவு கெட்டிக்காரஞயிருந்தாலும் முதன் முதலில் முதல்தரமாகக் குதித திருக்க வேணடும். அறைக்குள்ளே பலகை சாக்குகட்டி இவைகளுடன் பலவித விளக்கங்களுடன் படங்கள வரைந்து காட்டி, குடையுடன் குதிகக்கும் வகையெலலாம் சொல்லித் தந்திருப்பார்கள். குதிப்பதில் பயம் ஒன்றுமில்லை என்றும் சொல்லியிருப்பார்கள். இவவளவு கேட்டும், குதித்தவர்களின் நேரடி அனுபவத்தை அவர்கள சொல்லக் கேட்டும் தன் கண்ணுலேயே அவாகள் குதித்ததைப் பார்த்தும்கூட ஒருவனுக்குத் தைரி

யம் வராது. ஏரோப்ளேன் வாசலில் குதிக்கவேண்டிய கதவருகில வந்து கீழே பார்த்தவுடன், குதிககவேண் டிய உயரத்தையும், தூரத்தையும் பாாத்தவுடன் மனித இயறகை படைதத எவனும் அஞ்தித்தான் நிற்பான். அவனுக்குச் சொல்லித் தந்தவாகளும், அவனுடைய தோழர்களும் சேர்ந்து அவனைக் குண்டுகடடாயக் கட்டி வீசி எறியவேணடும். அநத நிலையில் 'புது அனு பவம் உள்ள அறியா உலகத்தில' அவன படிதத பாடங்கள் எல்லாம் தாமாகவே உதவ வந்துவிடும இப்படி முன் பின் அறியாத இந்த அனுபவ உலகத்தில் இறங்கும வாயப்புக்கள் சில கிடைத்துவிட்டால் பிறகு அவன், எணணம் வந்தவுடனேயே தாராளமாக மனத் துணிவுடன் 'சததமிடும் ஆகாயககோட்டை' (விமா னங்களிலிருந்து) ஈசுவரனுடைய வெளியில் இனிமை யாக இறங்கும ஆசசரியமான அனுபவத்தைப பெற முடியும.

குருதான் அந்த 'உபாத்தியாயா'. அன்பும் உத வும் எண்ணமும் கொணடு உண்மை அனுபவ உலகத திற்கு அந்த மாணவனை—தகுதி வாய்ந்த சாதகனை— தளளி விடுகிறாா. இந்தத் தளளிவிடுதல் என்கின்ற செய்கை உபநிஷத மந்திரஙகளின பொருளை அறிவிக கும்போது செயயப்படுகிறது. உபநிஷதங்கள் நம்மு டைய மதத்தின் தத்துவப் பகுதியாகும். மத சாஸதிரம் எனபது குட்டையான கூரையுடைய உலகமாம். பகுத் தறியும் விவேகம் தலைதூக்கியவுடன் மத சாஸ்திரம் உடைந்து தூளாகி விழுந்து அழிகிறது. அந்த மாதிரி சமயங்களிலதான் மனிதன் பொறுமைகள், தப்பு அபிப் பிராயங்கள் ஆகிய உததரம தாஙகுகட்டைகள் முத லியவற்றைத தாணடித தலையைத் தூக்கித் தத்துவம் எனகிற வானத்தில் பார்க்கிறான.

அந்த யக்ஷன் கதையில் இந்திரன் அந்த மாதிரித் தகுதியடைந்த மாணவன. உமா தேவி தானே அவ னுககுத தீக்ஷை செய்து வைககிறாள். 'அதுதான் பிரம்மன்' என்ற அறிவு மட்டும் ஆதம அமைதியான லட்சியத்திற்கு அழைத்துச் செல்லாது. அந்தக் கருத்தில் பிரம்ம வித்தையில் இந்திரனுக்குக் கிடைத்த இந்தத் தீக்ஷை முழுமையுள்ளது என்று சொல்ல முடியாது. இந்திரனுககு லட்சியத்தைப் பறறிப் பேச்சு அறிவுதான் கிடைததது.

ஸா பரஹமேதி ஹோவாச பரம்ஹணோ வா ஏதத்
விஜயே மஹியத் தவமிதி ததோ ஹைவ விதாஞ்சகார
ப்ரஹ்மேதி. 4.1

குரு: அவள் வியந்து கூறினாள். "பிரும்மம். பிருமமத்தின் வெற்றி காரணமாக நீ பெருமை பெறறாய." அப்பொழுதுதான இநதிரன் அந்த யக்ஷன் பிருமமன் என்று அறிநதான்.

இந்திரனுக்கு யக்ஷன் தன்மையைப் பற்றிக் கிடைத்தது செய்திதான் எனறாலும் சுருதி அந்த ஞானததின் பெருமையைப் பற்றித் தொடர்ந்து பேசுகிற தன்மை உபநிஷத ரிஷிகள் பிரும்ம வித்தையை மிகவும் உயர்த்திப பேசுகிறார்கள். தற்பெருமையும், கர்வமும் கொணட அக்னி, வாயுவும் கூட தேவ லோகத்தில தேவர்களை இடையே மதிபபுப பெற்றிருககின்றனர். ஏன் என்றால மூலப் பொருள்களின் தேவர்களான இவர்களுககுத்தான் தோறறம கொணட பரம்பொருளின் அருகே வரும வாயப்புக கிடைத்தது.

தஸ்மாத்வா ஏதே தேவா அதிதராமிவாந்யான் தேவான்
யதக்னிர் வாயுரிநத்ரஸ தேஹயே நந்நேதிஷ்டம்
பஸ்பர் ஸாஸ் தேஹ்யே நத ப்ரதமோ விதாஞ்சகார
ப்ரஹமேதி 4.2

ஆகவே இந்தத் தேவர்கள் (வாயு, அக்னி, இந்திரன்) மற்ற தேவாகளை மிஞ்சியவர்களாகிறார்கள. ஏன் எனில் அந்த (பரமனுடைய தோற்றமான) யக்ஷனை நெருங்கினாகள் (அனறோ). அது பிரும்மன் என்று முதலில் அறிந்தவர்கள் அவாகளதான்.

விஞ்ஞானச் சிறப்பை யெல்லாம் அறிந்த நவீன உலகத்தில் இருக்கும் நமக்கு இந்தப் புகழ்ச்சி மிகவும் சீர் பெறாத ஒன்றாகத் தோன்றலாம. சுருதி அத்துடன் நிற்கவில்லை. சுய பூரணத்வம பெறும் ஞானத்தை மேலும புகழுகிறது. அது இநதிரன் வாயுவுக்கும் அக்னிக்குமே அரசனாகும் பெருமை பெற்றான் என்று பேசுகிறது. ஏன் என்றால் அவன் உமாதேவியின் வாயாலேயே நேரடியாகப் பிரும்மத்தின் தன்மையைத் தெரிந்து கொள்ளும அபூாவ வாயப்புப் பெற்றான்.

தஸ்மாத்வா இந்தரோ அதிதராமிவான்யான் தேவான்
ஸ ஹ்யேநந நே திஷ்டம் பஸபாச ஸ ஹயேநம பரதமோ
விதாஞ்சகார ப்ரஹமேதி. 4.3

அதனுல் இந்திரன் மற்ற தேவர்களையும் மிஞ்சி நிற்கிருன். ஏன் என்ருல் அவன் 'அதை' மிகவும் நெருங்கினுன். அதைப் பிரும்மன் என்று முதலில் அறிநத வனும் அவனே.

இந்திரன் தேவர்களுள் எல்லாம் சிறந்தவன் போலவே, யார் சுருதிகளைப் படிததுப் பிரும மத்தின் தன்மையை உணர்கிருனே அவன் தன மக்களினத்துக் குள் சிறந்தவனுகிருன் அநதப் பொருளைப்பற்றிக் கேட்டறிய சிஷ்யன மேலே விவரிக்கப்பட்ட வண்ணம் இந்திர ஸதிதியை அடைய வேண்டும. அறியத் தீவிர ஆவல் வேண்டும். பணிவும சுயநலமறற தன்மை யும கொண்டு தேட வேண்டும். தன வெற்றியில் வற்ருத நம்பிக்கை வேணடும். அநத நிலையுடையுவனைத் தான இநதிரன் நிலையில் இருப்பவனுககக் கொளகிருேம. அந்தச் சிஷ்யனுக்குக் குரு சொனனவுடனேயே உண் மைப் பொருள தன் பூரணத் தன்மையுடன் தானே வெளியாகும்.

முதன் முதலில் ஏற்படும உண்மை தரிசன நேரம் அதிகம் நீடித்திருககாது. திடீர் என்று மின்னல் வேகத் தில தோன்றி வரும். ஆகவே சாதகன் மிகவும் விழிப் புடனும், எதிர் பாாத்து நிறகும் புததியுடனும் இல்லா விட்டால் அந்த ஒளி தோன்றும நேரததில் ஏமாந்து விடுவான். அதைத்தான் சுருதி பின்வரும் சுலோகத் தில நம் உடல், பிரும்மாண்டம் இந்த இரண்டிற்குமான இரணடு உதாரணம் கொடுத்து விளக்குகிருள்.

தஸ்யைஷ ஆதேசோ யதேதத விதயுதோ வயதயுததா
இதீ நந்ய மீமிஷதா இதய திதைவதம 4.4

இது பிரம்மனின் விவரணம். அது மின்னெளியுடன் பிரகாசித்தது. இமை கொட்டுவதற்குள் மறைநதது. இதுதான் தேவர்களுடன் ஒப்பிட்டுப் பார்ககும போது பிரும்மனின் விவரணமாம். (உலக சகதிகளாக அவன தோற்றம் தரும் விதம்.)

ஆதேசம் என்ருல பிரும்மனை விளக்க மேற் கொள்ளும் ஒரு உதாரண விளக்கம். சாதகன அதை

நேரடியாக ஆத்மாவே என உணரும்அந் நிலை மிகவும் குறுகிய அளவில் மறையக் கூடியது. மிகவும் நெருங்கி உணர வல்லது என்பதைக் காட்ட மிகவும் அழகிய உதாரணம் தரப்படுகிறது. மின்னல் சற்று நேரமே நிற்கும். ஒளியும் கண்ணைப் பறித்து எங்கும் பரவும். அதைப் போலவே அந்த உண்மை உணர்வு நேரம் மிகவும் குறுகி இருந்தாலும் கடைசியில் அதன் பயனுல் ஏற்படும் தெய்வ வாழ்வு அவனுள் மட்டும் இராது. அவனைச் சுற்றி எங்கணும் இருக்கும். அந்த உண்மை ஜோதி தரிசன நேரத்தில் அறிந்தது அறியாதது என் றெல்லாம் ஒன்றும கிடையாது. இரண்டற்ற அந்த ஒன்றுதான் இருக்கும. நானே அது என்ற உறவுதான் அது.

இமை கொட்டும் உதாரணம், தியானத்தில் அப்பா லுள்ள அந்தப் பரம பொருள் நிலையை அடைவது எவ்வளவு எளிது, மிகவும் இயற்கையாகவே தானே ஏற்படக் கூடியது என்பதை எடுத்துக் காட்டுகிறது. தியானத்தில் சிரமம எல்லாம் ஆரம்பத்தில்தான. நீந்தக் கற்றுக கொள்பவன் ஆரம்பத்தில்தான் முழுகு வது, தண்ணீர் குடிப்பது தத்தளிப்பது எல்லாம். அந்தக கலையை கற்றுககொணடு விட்டால் பிறகு கயிற்றின் மேல் நடப்பவன் மிகவும் சுலபமாகத் தினம இரவில அதைச் செய்துகாட்டுவான் ஒரு சிரமுமின்றி. அதைப் போலத் தியானம் பழகுபவனும் ஆரம்பத்தில் அவதியுறுவான. ஆனுல் சீக்கிரமே நம்பிககை வளர வளர அவன் மேலேறி மிதப்பான். சுலபமாகவே ஆத்ம தரிசனம் செயவான்.

பிரும்மாண்டத்திலிருந்து கொடுத்த உதாரணம் போதாதென்று சுருதித் தாய் அன்பு காரணமாக மற் ெறுரு ஆதேசத்தை உடலிலிருந்தே கொடுக்கிருள்.

அதாதத்யாதமம் யதேதத கசசதீவ ச மநோநேந
சைத துபஸ்மரத யபீக்ஷணம் ஸங்கல்ப: 4.5

உடலுக்குள்ளே ஆத்மஞக அந்தப் பொருள் எடுக் கும் தோற்றத்தைப் பார்வைக் கோணமாகக் கொண்டு விவரம் தந்தால்—ஒருவன் மனதால் பிரும்மத்தை நினைப்பது போல—மனம் இச்சை கொள்வது போல—அவ்வளவு வேகமாக.

சிரமமில்லாது சீக்கிரமாக ஒரு உண்மைச சாதகன் உணமைப் பொருளை அடைவதில் பெறும் வெற்றியை விளகக இந்த மந்திரத்தில் மற்றெருரு உதாரணம் தரபபட்டிருக்கிறது. கச்சதீவ, (வெளியே போவது போல) அபீக்ஷணம (மீண்டும் மீண்டும்) என்ற இரண்டு சொற்களும் மனே விஞ்ஞானத்தில் 'மனதால அறியும்' தததுவத்தைப் பற்றிப் பேசப்படும விதத்தை அப்படியே குறித்து நிற்கின்றன வேதாந்தம் அதூடே சும்விதத்தைப்பறறி நாம முன்னமேயே பேசியிருக்கிறோம். சைதன்யம் பெறறு இயங்கும் மனது, இந்திரியங்களின் மூலம் வெளியேறுகின்றது. அங்கே அவ்வப் பொருளாக உருவெடுககிறது அப்பொழுது மனதின் அதிகாரி (உடையவன்) அந்தப் பொருள்களைப்பற்றி அறிந்துகொள்கிருன்.

மீண்டும் மனம் ஒரு பொழுதும் இளைப்பாறி சும்மா இருப்பதில்லை என்பது மனோ விஞ்ஞான அனுபவமாம். மனது அதன் ஆழ்ந்த தூக்க நிலையில தமஸில் முழுகிக் கிடக்கும நேரம தவிர மற்ற நேரம் எல்லாம் ஒரே ஆரவாரமதான. விருப்பம் தூண்டிய எண்ணங்களாகிற பேய்கள தங்கள சாவுத தாணடவங்களை நிறகாமல் ஆடும் ஆட்டக் கூடமாக இருக்கிறது உள்ளே மெளனம் ஏறபட்டால அது அசண்ட ஆனந்தம்; பரிபூரண இன்பம, அது யோகி ஒருவனுககுத்தான் தெரியும. சாதாரண மனிதனுக்கு மனது பயங்கரப் புயல்களின் உத்வேக ஆர்ப்பாட்ட இடம். அலைகள் அலைகளாக எணணங்கள் எழுகின்றன. ஒன்றுக சொன்று மோதிகொண்டு வெற்றிலிருந்து கிளம்பியது போலவே அங்கேயே அழிகின்றன.

ஒரு எண்ணம எழுகிறது என்று கொள்வோம். அது எழுகிறது. மிகவும குறுகிய நேரம நிலைக்கிறது, பிறகு அழிகிறது. கடல் அலையற்று இருப்பது நடவாதது போல மனமும் எணணமின்றி இருக்க முடியாது. ஆகவே ஒரு எண்ணம் மறைநதவுடன் மற்றெருரு எணணம் எழுநது பல எண்ணங்களை வளர்க்கும் வண்ணம் மடிகிறது

எப்படியும இரண்டு எண்ணங்களின் இடையே ஒரு இடைவெளி இருக்கவேண்டுமல்லவா? அந்தச் சமயத்தில் மனம் எண்ணமின்றி இருக்கும். ஏற்கனவே நாம் பார்த்தபடி மனம் என்பது எண்ணஙகளின் நீரோட்டம்

தான். எண்ணம் இல்லாத நேரத்தில் மனமும் இல்லை, சுருதிகளின் முடிவு, மனம் அற்றுப்போன அந்த நேரத்தில் யோகி உண்மையில் ஆழ்ந்துவிடுகிறுன்.

இப்பொழுது அபீக்ஷணம் எனற அந்தச் சிறிய சொல் எவவளவு கருத்தை உள்ளடக்கி நிற்கிறது என்று தெரிய வரும். உண்மை தோன்றி மறையும் அந்தத் தன்மையை விளக்க நம் முள்ளே உள்ள மிக சூட்சுமமான தத்துவம் உதாரணமாகத தரப்படடிருக்கிறது. தியானத்தில் பெறப்படும் உண்மை திடீரென்று தோன்றி மின்னல் போல் மறையும். உண்மையை விளகக இது எவ்வளவு சரியான உதாரணம் எனறு உங்கள் ஒவ்வொருவருக்கும் தெரிய வந்திருககும.

தத்த ததவனம் நாம ததவன மித யுபாஸிதவ்யம
ஸ ய ஏததேவம் வேதாபிஹைனம் ஸர்வாணி
பூதானி ஸமவாஞ் சந்தி

பிரும்மன் தத்வனம் என்று அறியப்படுகிறது— எல்லா ஜீவன்களுடைய ஆத்மனைகப் பூஜிககத தகக வன் ..எனவே அது தத்வனம் எனற முறையில் தியானம செய்யத தக்கது. அதை இவ்விதம் எல்லோரும் அன்பு செலுததுகிறுர்கள்.

உபநிஷதம் இதுவரை சொல்லிவந்தவைகளை உணர இயலாத குறைநத நிலை மாணவாகளின் உதவிககாக உபநிஷத ஆசிரியர் இங்கே உபாசனைககு ஒரு வழி சொலலித் தருகிறுர்.

இந்நாட்களில் ஆத்மீக, மதத் துறைகளில் உபாசனை முறைகள் மிகவும் குறைவாகக் காணப்படுகின்றன. ஆனுல் வேத காலததில் எல்லாச் சாதகர்களும் உபாசனை முறைகளை நன்கு தெரிந்துகொண்டிருந்தனர். குறிப்பிட்ட கருத்தைப் பற்றி அறிந்து அதைப் பிரும்மாண்டத்திலே செலுத்திப் பார்க்கும் ஒருமுக முயற்சியிலேயே நன்கு உறுதிப்பாட்டுடன் சிந்தனை செய்து நிற்க அவர்கள் முயன்று வந்தனர். மற்ற எண்ணங்கள் எல்லாம் அறவே ஒதுக்கி ஒரே எண்ணத்தைப் பற்றித் தியானம் செய்யும் தியானிக்கு உபாஸனையின் பயன் கிட்டுகிறது. வேதாந்தம் காட்டித் தரும் உண்மைப் பொருளைப் பெற விரும்புபவனுக்கு உபாஸனையின் பயன் விலைமதிப்பற்ற புனிதமான ஆன்மீகப் பொக்கிஷ

மாம். அதை அவன் தன் தியான சக்தியாலும் உள்புற வளர்ச்சியாலும் அடைகிருன்.

இந்தச் சமயம் மிகச் சில ஹிந்துக்களே உபாஸனை பழகுகிருர்கள். ஏற்கனவே அமைதியானதும் புத்தியை அடிப்படையில் கொணடதுமான தியானமுறை இருநது வந்தது. அதற்குப் பதில் இன்று அதன் புதுமுறை பக்தியில் இடம் பெற்றிருக்கிறது. அந்த வழியிலும் அன்பு, உதவேகம் இவைகளின் புயல் எழுப்பப்பட்டு தியான அமைதி நிலையை அடைகிறது. அந்தச் சிறந்த பகதி மார்க்கம் நமக்கு வியாசரின் மேதை பொருநதிய புராணங்கள் மூலம் தநததாம. அது புராணக் காலங்கள் வரும்வரை ஆரியாகள் வெளியே அமைதியும் உளளே ஞானமும் வளர்நத ஒரு சூழ்நிலையில இடை யருத ஆதம சோதனை மூலம் சுயநிறைவை அடைய முயனறிருபபதையே வாழ்வாகக கொணடிருந்தனர்.

தியானத்தைப் போலவே அதே ஆற்றலுடன் பக்தியும் சாதகனைப் பரிசுத்தனுகப் பகவானைப் பரம் பொருளாகத் தியானிக்கத் தயாராக்குகிறது. நிறைவு பெருத சாதகர்களுக்கு நிர்விகல்ப சமாதி தியான நிலைக்குப் போவதற்கு முன் இந்தப் பயிற்சி அவசியம் தான். அதைததான் சுருதி அன்பும் கருணையும கொண்டு சொல்லித் தருகிறது. வேதாந்த சாதகன் பரம மெய்மைப் பொருளை தத்வனமாகத் தியானம் செய்ய வேணடும் என்று அது சொல்லுகிறது. அதாவது எங்கும் ஊடுருவி நிற்கும் பொருளாகத் தியானம் செய் என்பது அதன் கருத்து.

சுருதியைக் கவனத்துடன் படிக்கிறவனுக்கு இங்கே சுருதி ஏறு மாருகப் பேசுகிறதோ என்று தோன்றலாம். ஏன எனில் முனனே அது இந்தத தேவதையையும் உபா சிபபதை வன்மையாகக் கண்டித்திருக்கிறது. ஆனுல் நன்கு கூர்நது பார்த்தால் சுருதி மூர்த்தி பூஜையை அப்படியே கண்டிக்கவில்லை, ஆனுல் அது வழி மட்டுமே என்று உணராமல் முடிவாகவே ஏற்றுக் கொள்வதைத் தான் கண்டித்திருக்கிறது. பூஜையோ, உபாஸனையோ, தம்முள் தாமே இறுதி இலட்சியங்களல்ல. மனம, புத்தி, அநதககரணங்களைப் பதம் செய்ய அவைகள் வழியாக இருககின்றன. அவ்வளவுதான். இது கிடைத்தவுடன் சாதகன் மேலே சென்று அந்தக் கருவிகளை உயர்ந்த தியானத்திற்கு உபயோகிக்க வேண்டும். ஆனுல்

ஜனங்கள விவேகம், துறவு மனபபானமை இலலாத காரணத்தால் உபாசனையால் கிடைத்த தங்கம் போன்ற பயனை இந்திரிய சுகத்துககான விலை பேசிவிடத் தயாராய்விடுகிறார்கள். 'நைதம் யதிதமுபாஸதே'--இதல்ல நீ உபாஸனை செய்வது—என்று சொல்வது ஒரு எச்சரிக்கை. உபாஸனையைக் கேவலம் சிலலறைச் சுகங்களுக்கு, அல்லது அடுத்த உலகத்தில இடம் பிடிக்க என எண்ணுபவர்களுக்கு இது ஒரு எச்சரிககையாகும்.

" எண்ணுகிறபடி ஒருவன் ஆகிறான் " என்பது ஒரு நித்திய உண்மை. இந்த இயற்கைத் தத்துவத்தை எல்லாப் பெரிய மதங்களும் ஏற்றுக் கொள்கின்றன. ஈசுவரன் எங்கும் பரவி நிற்பவன், ஒவ்வொரு ஜீவனுள்ளும இருக்கும் இயக்க சக்தி அவனதான் என்ற உருவத்தில் தியானம் செய்யும சாதகன் தியானப் பொருளாகவே ஆகித் தன் தலைமுறை மக்கள எல்லோராலும் போற்றப் படுகிறான்.

## சுய நிறைவு முறை

## (ஆத்ம பூரணத்வம் அடையும் வழி)

உபநிஷதம் போ ப்ரூஹீதயுக்தா த உபநிஷத
ப்ராஹ்மீம வாவ த உபநிஷத மப்ரூ மேதி 4.7

சிஷயன . ஐயா, எனக்குக் காபபாற்றும் ஞானத்தைச் சொலலித் தாருங்கள்.

குரு . காக்கும் ஞானம் உனக்குத் சொல்லித் தரப்பட்டு விட்டது. உண்மையிலேயே நாம் உனக்கு பிரும்மனுடைய காக்கும் அறிவைச் சொல்லித் தந்து விட்டோம்.

குரு சொன்ன உபநிஷத்தை அறியாத சிஷயன் போட்ட கேள்வி அல்ல அது. அதன் முறையில் இனிப் பாககித் தரவேணடிய அறிவு மிச்சம் இலலை என்பதைக் குறிக்க உபயோகிககும் முறைப்படி இநத விதம் சொல்லப்பட்டிருக்கலாம். தவிரவும் குரு புனிதமானதும் அவசியம வேணடியதுமான ஏதாவது விஷயத்தைப பாக்கி வைத்துக் கொண்டிருநதாலும் உபநிஷத்தின் பூரண அறிவுககாக மேலும்மேலும் குருவிடம் கேட்டுக் கொள்ள சிஷ்யன் கொண்டுள்ள ஆவலைக் குறிக்கிறதாகவும் இருக்கலாம்.

மேலும் இந்தக் கேள்வி சிஷயன் யோக முறையைப் பற்றியும், அதாவது உள் சுத்தம் பெறும் முறையைப்

பற்றிக் கேட்க விருமபுவதாகவும கொள்ளலாம். உப நிஷத உண்மைகளைப் புரிந்துகொள்ளவே அந்தப் பயிற்சி தேவை. உணமையை அனுபவித்து தெய்வத் தன்மை எயத அது இல்லாமல ஆகாது. இநதக கருத் துக்கு அடுத்த உபநிஷத மநதிரம வலுத் தருகிறது உப நிஷத மந்திரங்களைப பூரணமாக அறிநதுகொளள தபஸ் தேவையென்று கூறுகிறது.

தஸ்யை தபோ தம: காமேதி ப்ரதிஷ்டா வேதா
ஸர்வாங்காநி ஸதய மாயதநம 4.8

தவம, தன்னடக்கம், அர்ப்பணிககப்பட்ட காமம்—இவைகள் அதற்கு உபநிஷத்தின காககும் ஞானத்திற்கு ஆதாரம் வேதம அதற்கு அங்கங்கள. உணமை அதன் இருப்பிடம.

முதல் மந்திரத்திலேயே குரு உபநிஷதம் பூராவை யும சொல்லி விட்டதாகச் சொலலிவிட்டார. அப்ப டிச சொல்லியும்கூட சுருதி பிறகு ஏன மந்திரங்களைச் சேர்க்கிறது என்று ஆசசரியமாயிருககிறது. சமபா ஷணை நடையில் எழுதப்பட்ட உபநிஷத்தில் இப்படிச் செயவது இலக்கிய நடையில் குற்றமாகாது. 'சிஷ்யன் எனககுக காககும் ஞானததை உபதேசிதது அருளுக' என்று கேட்டான் எனபது ஞாபகம இருக்கும. இநதப் பேச்சுகக இரணடு கருததுககள் இருக்க முடியும: 1. உபநிஷதம முடிந்து விட்டது என்ற அறுதியான பேச்சை அவன் குருதேவரிடம நேரடியாக எதிர் பார்த்து இந்த விதம் கேட்டிருககலாம. 2. மறைமுக மாகப் பூரணத்வம் அடையும் முறை வகையைப் பற்றி இன்னும் தெளிவாகச சிஷ்யன் அறிய விரும்பியிருக்க லாம—குரு இநதிரியங்கள் இவைகளைச செலுத்தும் ஆற்றற் பொருளைப் பற்றி ஒன்றும் விடாமல் விபரம் தநதுவிட்டார். எனறாலும அவர் அந்தப் பரம ஞானத்தை மயக்கத்தில மறந்து நிற்பவன் அடையும் வகையை விவரமாகச் சொல்லவில்லை.

சுருதி சொன்ன இநத ஆதம நிறைவை எபபடி அடையலாம் எனறு கேட்பது ஹிந்து வேதாந்ததநின் சிறந்த தனிப் போக்காம். பகுததறிவுக்கு மிகவும் ஒத் ததும், மற்றவைகளைச் சகித்துக் கொளளக்கூடியதும் உணமை அன்பு கொண்டதுமான வேதாந்த மதததைக் கண்ட ஆரியப் பெரியார்களின் பணபட்ட சிந்தனை யைப் போல் வேறு எந்த இனமும் இவ்வளவு முழுமை யும் நிறைவும் கொண்ட சிந்தனை செய்ததில்லை.

ரியச் சிந்தனையாளருக்குத் தத்துவ சாஸ்திரம் வாழ்க்கையைப் பற்றிய ஒரு கண்ணோட்டம் அல்ல. உணர்ச்சிக் கற்பனைப் பூப் பின்னல் அல்ல. சுவர்ககக் கனவுமல்ல. அவர்கள் நேரடியாக வாழ்க்கையில் ஈடு பட்டுச் செயலாற்றினவர்கள். இன்னும் கூட மேலே நாட்டினருக்குத் தததுவம் என்பது வாழ்க்கையைப் பற்றிய ஒரு நோக்குதான். ஆகவே அவர்களிடம் அடிப் படை ஆதாரங்கள் கிடையாது, உபதேசம் செய்ய. ஆகவே தலைமுறைக்குத் தலைமுறை வாழ்கையின் இலட்சியங்களை அந்தக் கால மக்களுக் கேற்றவாறு மாற்றவேண்டியிருந்தது. மாற்றுவது சுலபமாகவும் இருந்தது.

நம் மூதாதையருக்கு அது வாழ்க்கையைப் பற்றிய நோக்கு மட்டுமல்ல. அது வாழும் ஒரு வழியுமா யிருந்தது. வேதாந்தத்திற்கு சமஸ்கிருதத்தில் தரிசனம் என்று பெயர். அறிதல் என்ற கருத்துக்கொண்ட மூலச் சொல்லிலிருந்து வந்தது. உண்மை எவ்வளவு சூட்சும மாயிருந்தாலும்கூடத் தரிசிகளான நேரடிச செயலில் ஈடுபடடிருந்த அவர்கள் ஒரு வெற்றுக் கனவுக் கருத் தைக் கொண்டு உண்மையைக் காணும் ஆசையைத் திருப்தி செய்து கொண்டிருக்க முடியாது. புத்தியின் உதவியால் ஒரு இலட்சியத்தின் பெருமையைக் கண்டார்கள் என்றால் உடனே அதை அவர்கள் வாழ்க் கைக்கு வழியாகக் கொண்டார்கள். அதைப்போல உண்மைப் பொருளைப்பற்றிச் சிந்தித்து அறிந்தார்கள் என்றால் மண்டியிட்டுப் போற்றிப் பூஜை செய்ய ஒரு மூர்த்தியைச் சிருஷ்டி செய்துவிட்டு அத்துடன் திருப்தி யடைந்திருக்கவில்லை. ஆரியனுடைய சனாதன தர்மத் தில் ‘நேரடியாக உணர்தல்’ தான் உண்மைப் போக் காம். கவிதை எழுதுவது பல வர்ண வார்த்தைப் பின்னல்கள் செய்வது எல்லாம் அவர்களுக்குச் சிறு பிள்ளை விளையாட்டு. அவர்கள் பண்பாடு கனவுப் பரம் பரையல்ல.

உபநிஷத் தலைமுறைக்குத் தக்க பிரதிநிதியாக இருக்கும் தகுதியுடைய அந்தச் சிஷ்யன் கேட்ட கேள்வி யில கருத்துக்கள் அதிக ஆழத்தில் இருக்கின்றன. இலட் சியத்தைப் பிடிக்கக் கருத்துக் கொள்வது ஆரிய சிந்தனையாம். அதையே வாழ்க்கையில் கொள்வது அவர் வாழ்க்கை வழியாம். அதை நன்கு உணர்ந்த குரு

தேவரும் இந்த மந்திரத்தில் சனாதன தர்மத்தின் நான்கு எல்லைகளாக உள்ள பொருளை நன்கு விளக்குகிறார்.

அந்தப் பரம உண்மைப் பொருள் அதாவது இன்றைய பேச்சில் தெய்வ தத்துவம், தவம் (பிடிவாத மான நல்ல வாழ்க்கை) புலனடக்கம் அர்ப்பணம் செய்யப்பட்ட சுயநலமற்ற வேலை இவைகளின் ஆதாரத்தின் மேல்தான் தங்கியிருக்கிறது என்று உபநிஷதம் கூறுகிறது. ஜீவன் சூட்சுமத்தில் சூட்சுமமான அந்தப் பொருளை உணர்ந்து பெறத் தகுதியான பக்குவத்தை அடைய வேண்டுமானால் இந்தக் குணங்களைக்கொண்டு வாழவேண்டும் என்பது உபநிஷத்தின் கருத்து. இதை சாதாரண அறிவுள்ளவன்கூடக் கண்டு கொள்ளலாம். உலகில் எந்த மதமும் வேறு கொள்கைகளைப் போதிக்காது. இன்று இவைகளை விட்டுப் பொலலாத வாழ்வு வாழ்கின்றோம் என்றால் அதுதான் நம் தனி வாழ்வு, சமூக வாழ்வு, தேசிய வாழ்வு உலக வாழ்வுகளை அழிக்கும் பாம்பு. அந்த வாழ்வின் காரணமாகவே இந்தச் சிறந்த பண்பாடுகள் கெட்டன. அந்த நற்பண்புகள் உண்மை வாழ்வை ஆக்கி நலம் பயக்கக் கூடியவை. அவற்றை நாம் யோசனையின்றி ஒதுக்கி விட்டோம்.

சாதகன் மனம் கேட்கும் இன்பத்தைத் தர மறுக்கும் ஆற்றல் கொண்டவனாதல் வேண்டும். இல்லை என்றால் அவன் ஆத்மீகத்துறையில் முன்னேறமுடியாது மனம் உள்ளேயுள்ள கனவுலகத்தின் அச்சு. அது அப்படித்தான் எதையாவது பித்துப்பிடித்துக் கேட்டுக் கொண்டேயிருக்கும். அதை ஒதுக்கித் தனித்து நிற்கும் சுதந்திரமும் ஆற்றலும் இல்லாத பெண்மை கொண்டவனுக்கு ஏற்பட்டதல்ல மதம். புலனின்பப் பொருள்களான மணற் குவியல்களிடையே ஆசைகளின் சூட்டில் விளையாடவே ஓடும் இந்த மனதின் அசட்டு ஆசைகளுக்கு 'முடியாது' என்று சொல்லும் துணிவுகொண்ட பலசாலிதான், குறிப்பிட்ட திட்டப்படி ஆத்மீகப் பாதையில் முன்னேற முடியும். அதனால்தான் சுருதி பண்பட்ட நல்ல வாழ்க்கையை (தவத்தை) வலியுறுத்துகிறது. 'உண்மைக் கோவிலுக்கு' தபஸ் அஸ்திவாரத்தில் ஒரு பகுதி என்று சொல்லுகின்ற வரையிலும் கூட அது அதன் பெருமையை எடுத்துச் சொல்கிறது.

இந்திரியங்கள் தங்கள் மிருக இச்சைகள் காரணமாக மறையும் இன்பத்தைக் காணும் ஆவலுடன் புறப்

பொருள்களிடம் பாயும் பாய்ச்சலைத் தடுப்பதற்குத் தபஸ உதவிபுரியும். தமம் (புலனடக்கம்) என்பது ஆசையை முளையிலேயே அடக்குவதாம். இரண்டுமே தன்னடக்கத்தின் இரணடு பக்கங்கள்தாம். ஒன்று உடல் அளவில உள்ள கட்டுப்பாடு, அடுத்தது மனமும் ஏற்றுக்கொள்ளும் அடக்கமாம். சுருக்கமாக, ஓரளவு தன்னடக்கம் இல்லாமல் சுயபூர்ணத்துவம் இயலாத ஒன்றுகும். குருடன் தன் ஒரே மகனை ஒரு முறையாவது பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுவது போல்தான் ஆகும்.

சாதகனின் உடல் மனம் இரண்டும் சுத்தம அடைந்து, புனிதமடைந்து, தெய்வீகத் தன்மையை அடைந்த பிறகு, சுருதி அவனிடம் சுயநலமற்று அர்ப்பணிக்கப்பட்ட செயலை எதிா பாாக்கிறது. நீங்கள் ஆச்சரியமாகக கேட்கலாம். "நீர் சொல்வது உண்மையாஞல் 'கர்மம் பரம உண்மையின எல்லைக் கற் களில் ஒன்று' என்று சொல்லும் சுருதி வாக்கியத்திற்கு என்ன பொருள் ?"

பிரும்ம வித்தையில் கர்மம் என்ருல் தார்மீகக் கிரி யைகள் அல்லது முழுசாக ஆனமீக சாதனைகள் அனைத தையும் குறிக்கும். பூஜை, பிரார்த்தனை, சத்சங்கம், ஜபம், தியானம் என்று பகதன் செய்யும் எல்லாமே கர் மததின்பாற்படும். ஏதோ உடனே லாபம் கிடைக் கும் அல்லது அடுத்து ஏதோ நன்மை ஏற்படும் என்று விரும்பி ஒருவனும் பூஜை, பிரார்த்தனை இந்தச் செயல் களில் ஈடுபடக் கூடாது என்று சுருதி புத்திமதி சொல்லுகிறது.

சுயநலமற்ற 'கோபியர் அன்பு'டன் பக்திசெய்தால் அந்தந்தத் தெய்வ ஒளி நம்முள்ளேயும் வெளியேயும பரவும். அந்தக் கண்ணன் நம் உண்மைத் தன்மையி லிருந்து கடைந்து எடுத்த வெண்ணெய்போன்ற பதிவு களையும் திருடித் தின்று மறைந்துவிடுவான்.

உள்ளேயும் வெளியேயும் உண்மை, நம்பிக்கை நேர்மை இவற்றுடன் கட்டுப்பாடு தன்னடக்கம் பயின்ற ஒருவன் இந்தக் கருமங்கள் செய்யத் தகுதி யுடையவஞக ஆகிருன். அவன்தான் உண்மைப் பிரா மணன். அப்படிப்பட்ட கர்ம யோகி ஒருவன் ஒப்பற்ற

நம் ஹிந்து மதம் சொல்லித் தந்த நான்கு முக்கிய சாதனை வழிகளைப் பக்தியுடனும், உறுதியுடனும், மேற்கொண்டானானால் அவன் தியான வகுப்புகளுக்கு அரிச்சுவடி தூக்கும் தகுதியை அடைகிறான். பழக்கம் ஏற்பட்டு பொறுமையுடன் நீண்டகாலம தியானங்கள் செய்து அவன் உண்மைப் பொருளை உணர்ந்து அதில் வாழும் வாயப்பைப் பெறுகிறான்.

அநேகமாகக் கடைசி மந்திரமான இதில்தான் உபநிஷதம் தருகிற தத்துவப பொருளகள், வாழ்ககை யாக அமைய ஒருவன் ஏற்றுக்கொள்ள வேண்டிய வாழக்கை முறை தரப்பட்டிருக்கிறது. அதனாலதான அதன் கருததுக்கள் ஆழநதிருககினறன அதன் சுட்டுக்கள தொலைவுவரை தொளைத்திருக்கின்றன ஒவ்வொரு முறை புத்திப் பட்சி பாயுமபோது அலகு நிரமபப் புதுப் புதுக் கருததுககளை எடுத்துத் தருவது சாத்தியமாகிறது.

இந்த மந்திரம வேதங்கள அதன் அங்கங்கள் என்று பேசுகின்றன. பரம மெய்மைப் பொருளுககு அங கங்கள ஏது? அது என்ன பெயர் தோறறம ஏறகும் ஒரு பொருளா? கருதது இது தான். உபநிஷதம் பேசும் ஆத்மப் பொருளை அடைய விரும்பும் மாணவனுக்கு ஆறு உபவேதஙகளும ஆதாரமாம. அதை நாம் இப்படியும் கொள்ளலாம். படிக்காத ஒருவன பயிற்சியில் மட்டுமே உணமைப பொருளை உணாநது விட்டானானால் அது மகா ஆச்சரியமதான. என்றாலும் சுருதி சொல்வதன பொருள இதுதான: கல்வி வீணல்ல. எந்த ஞானமும் அனாவசியமலல எந்த அனுபவமும் அதிகமாகாது. அவை எல்லாம மெய்மைப் பொருளை நோககி நாம் செல்லும யாத்திரைகதம உதவுமபடி நாம் செயது கொளளமுடியும்.

சத்யமாயதனம்—உண்மையின் இருப்பிடம் அந்த மெய்ப பொருள்—என்ற பேசமுடியாத இநதச சொலலில்தான் எவவளவு கருத்துககள பொதிநதிருககினறன? அரிசசந்திரனை ஒத்த உணமை விரதம் எடுத்துக் கொள்ளாத எந்தச சாதகனும் உணமையின கர்ப்பககிரகத்திறகுள் செல்ல முடியாது. ஆகவே பிராமணன் (சாதகன எனறு கருத்து) மனம், வார்த்தை, செயல் மூன்றிலும் உணமையைக் கடைப் பிடிககவில்லை எனறால் அவன் உபநிஷத நிலையிலிருந்து பார்க்குங்கால்

'சண்டாளனே'. அவனுக்கு உண்மைப் பொருளை நெருங்கும் தகுதி கிட்டாது.

உபநிஷதம, மெய்ப்பொருள் உண்மையில் இருக்கிறது என்று அறுதியிட்டுப் பேசுகிறது. வியவகாரத்தில் சுத்தமில்லை என்றால் பரமார்த்தமான வழியில் எந்தச் சாதனையும் பயன் பெறாது. சாதகன் எல்லாச் சந்தேகஙகளுக்கும் அப்பாற்பட்டுத் தொலைவில் ஒதுங்கி இருக்க வேண்டும். அவன் ஆத்மீக வாழ்வோ உலகியில் நீதி வாழ்வோ சுத்தமாக இருக்க வேண்டும்.

யோ வா ஏதா மேவம் வேதாபஹத்ய பாப்மான மனந்தே ஸ்வர்கே லோகே ஜ்யேயே ப்ரதிஷ்டதி ப்ரதிதிஷ்டதி. 4.9

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

எவன் ஒருவன் அதை இவ்விதம் அறிகிறானோ அவன் (உண்மையில்) பாபத்தை அழிக்கிறான். எல்லை யற்றதும் உயர்ந்ததும் ஆனந்த ரூபியுமான அந்தப் பிரும்மத்தில் நிற்கிறான் ஆம் அதில் நிற்கிறான்.

கடைசி மந்திரம் இது. இதைப் பேசும் மெய்ப்பொருள் கண்டார், இதுவரை பேசி வந்த பேச்சைப புரிந்து கொண்டவன் அந்தப் பரம்பொருளை அடைவான் என்று வலிவுடன் கூறுகிறார். உபநிஷதங்கள் அப்படித்தான் பேசுகின்றன. "பிரும்மத்தை அறிதல் என்பது பிருமமமாதலே." மென்னியைப் பிடிக்கும் கட்டுககள், தூற்றத்தக்கச் செயலின்மை எல்லாம் நாம் உணமைத் தனமையை அறியாமல் ஏற்றுக் கொண்ட அசட்டுத் தனமே. தொலைநது விட்டோம் என்று தப்பாக எண்ணி நாம அழுது கண்ணீர் விட்டுக் கண்களைக் கசக்கி நிற்கிறோம்! இது மயக்கம, இதை ஒழித்து மீண்டும் நம்மை நாம் அறிய வேண்டும. நம் உண்மைத் தன்மை அந்தப் பரமானந்த நிலைதான். ஞானம்தான் இந்த அறியாமை வியாதிககு மருந்து. பாம்பில் உள்ள கயிறைக காணுவதுதான் இருட்டில் அது கடித்து ஏறிய விஷத்தைத் தணிக்கும் உண்மை மருந்தாம்.

ஒரு முறை ஒரு பெண் தன் தங்கச் சங்கிலியைத் தொலைத்ததாக எணணினாள். வீட்டிலும அடுத்த வீட்டு வாசலிலும் தேடினாள். அதை நினைகக நினைக்க அவள அழுகையும் ஆத்திரமும் அதிகமாயின. அப்படி அழுது

அலங்கோலமாய விழுந்து கிடந்த நிலையில் வந்தான் அவள் கணவன். அவள அவனிடமும் அழுதாள் தன் கதையைச் சொல்லி. அவன் விழித்தான் ''அதோ உன கழுத்தில என்ன?'' என்ருன் அவளுக்கு அவனிடம் மட்டற்ற மரியாதை உண்டு. நடுஙகாத நமபிககையுண்டு. மெதுவாகக் கைவிரல்களால் தன் கழுததைத் தடவிப் பார்த்தாள். விரல் சங்கிலியின் ஒரு கணுவில் பட்டது. சங்கிலி தன்னிடம்தான் இருக்கிறது என்ற எணணம் உடனே வர அவளும் தொலைநதிருந்த தன் அமைதியையும் ஆனந்தத்தையும மீணடும் பெறருள.

சங்கிலி புதிதாக வரவில்லை. அங்கேதான் அது இருந்தது. இல்லையென்று அவள கொணட பிரமை தான அவள் அழுகைக்குக்காரணமாயிறறு. எப்பொழுது தொலையவில்லை என்ற அறிவு வந்தவுடன் பரபரப்பு அடங்கிப் பிரமைஏற்படும் முன்பு கொண்டிருந்த அமைதியை அந்தப் பெண் அடைந்து விட்டாள். அதாவது சங்கிலி பூண்டு ஏற்கனவே இருந்த அநதப் பெண்தான இப்பொழுது நான் எனறும அதைச் சொல்லலாம் ஆகவே அறியாமை அறிவுக்கு இடம் தந்தவுடன் அவள் பழைய பெண்ணுக மாறிவிட்டாள்.

நாம் ஈசுவரனேதான் என்ருலும் நம்முள்ளே உள்ள ஆத்மா தான் ஜீவன் என்று நம்பும அறியாமையை ஏற்றுக் கொள்கிறது. இவ்விதம் நம்பி அது தெய்வத் தன்மையை இழந்து கஷ்டத்தையும், வருத தத்தையும் அனுபவிககிறது. ஜீவனுக்குப் பதி சற்குரு தான். அவர் ஜீவனின் வாழ்க்கை வீட்டில் நுழைகிருர. 'தெய்வத்தன்மை தொலையவிலலை; அங்கேதான் ஒளிவீசி அழகாயிருககிறது'' என்று சொல்லித் தருகிறர். ஜீவன் முதலில் அவரிடமுள்ள பக்தி காரண மாகவே நம்புகிருன். பிறகு தானுகவே தான் தான் அது என்று கண்டு பிடித்து அந்த நிலையை அடைகிருன். ஆத்ம போதம் ஏற்பட்டவுடன் அவன் ஆத்மாவாக ஆகி விடுகிருன்.

ஆத்ம ஞானத்தின் இந்தத் தத்துவம்தான் வேதாந்தத்தின் ஆதாரத் தத்துவம். கேனேப நிஷத்தின் கடைசி மநதிரம் இந்தக் கருத்தைத்தான் குறிக்கிறது. அதைஅறிந்த யாரும் உபநிஷத இலககியம் முற்றிலுமே இது ஒரு மிகச் சிறந்த மந்திரம் எனறு ஒத்துக்கொள்ளாமல் இருகக மாட்டார்கள். ஒரு வாசகன் மந்திரத்தின்

உள்ளே பிரவேசித்தால் அவன் இந்த உண்மையின் அப்சரஸமான மந்திரத்தின் சிறப்பையும், ரகசியமான அழகையும் கண்டு கொள்வான்.

ஓம் ஸஹ நாவவது ஸஹநெள புனக்து ஸஹு வீர்யம் கரவாவஹை தேஜஸ்வி நாவதீத மஸ்துமா வித்விஷாவஹை

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி

"அவன் (ஈசுவரன்) நம்மிருவையும் காக்கட்டும் அவனை நாம் சேர்ந்தே உணர்வோம். நாம் சேர்ந்து முயறசி எடுப்போம். நம் படிப்பு பயன பெறட்டும். நாம சண்டையிடாமல் இருப்போமாக."

'ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி'